# திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள்



இரா. அகிலா




# திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள்

இரா. அகிலா

கபிலன் பதிப்பகம்
12 7 ஆவது குறுக்குத்தெரு
பாரதிநகர்
புதுச்சேரி - 605 008.







## நூல் விபரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் (Thirunedundhandagathil Agapporul) |
| ஆசிரியர் | : | இரா. அகிலா (R. Aquila) |
| பதிப்பாண்டு | : | முதற்பதிப்பு டிசம்பர் 2006 |
| படிகள் | : | 1000 |
| பக்கங்கள் | : | 136 |
| விலை | : | ரூ. 60/- |
| வடிவாக்கம் | : | சொ. அருணன் |
| அச்சிட்டோர் | : | ஆல் இந்தியா பிரஸ் புதுச்சேரி - 605001. |

வெளியீடு

**கபிலன் பதிப்பகம்**

**12, 7ஆவது குறுக்குத்தெரு,**

**பாரதிநகர் - புதுச்சேரி - 8.**

e.mail: kapilanpub@yahoo.co.in

**இந்நூல்**

**திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின்**

**பொருளுதவியால் வெளியிடப்பெறுகிறது.**







# வாழ்த்துரை

தமிழ் இலக்கியங்களுள் அகம், புறம் இருவகையிலும் இறைவன் திருமால் புகழ்பெற்று விளங்குகின்றான்.

“அகத்தனன், புறத்தனன் அமைந்தே” என்பார் நம்மாழ்வார். ஆழ்பொருள், செம்பொருள் என இருவகைத்தமிழுள் பரம்பொருள் இறைவனும் இனிது காட்சியளிக்கிறான்.

நூல் பயனாக வடமொழியாளர், அறம், பொருள், இன்பம், வீடுபேறு எனப் பிரித்தவற்றைத் தமிழில் அகம் புறம் என இரண்டாக வகுத்தனர். புறத்துறை நூல்களை விஞ்சியது அகத்துறை.

ஆழ்வார்களின் செந்தமிழில், நம்மாழ்வாரும், திருமங்கை மன்னனும் இயற்றிய நூல்களிலும் அகத்துறைச் செய்திகள் விஞ்சியுள்ளன. ஆண்களான அவ்விருவரும் புருஷோத்தமனை அடையப் பெண்மையை ஏற்று, பல பதிகங்களில் பாசுரமிட்டனர்.

தாய், தலைமகள், தோழி எனத் தம் உணர்வுகளை நற்றமிழில் வடித்துள்ளனர்.

ஸ்ரீமதி அகிலா ஆய்வுநோக்கில் திருமங்கையாழ்வாரின் ஆறுநூல்களின் முடிமணியாகத் திகழும் திருநெடுந்தாண்டகத்தினுள் புக்கு அகத்துறை தழுவியுள்ள ஆழ்பொருளை ஆய்ந்து செம்பொருளாகத் தந்துள்ளார்.

இளவயது தொடங்கியே இத்தகு இறைபணிகளில் நாட்டம் கொண்டு செய்நேர்த்தியுடன் செயல்படும் ஆற்றலுள்ளவர் அப்பெண்மணி.

அவரது பணிகள் புகழ்மிக்கு ஓங்குக! இதயம் கனிந்து வாழ்த்துகிறேன்! நித்ய ஸ்ரீ நித்ய மங்களம்!

இவண்,

**அப்பன்பரகால ராமானுஜ எம்பார் ஜீயர்.**

# ஆனந்தம் தரும் நூல் இது!

**கே. இ. தரணீதரன்**

**சமஸ்கிருதத் துறைத்தலைவர்,**

**புதுவைப் பல்கலைக்கழகம்**

**புதுச்சேரி.**

ஸர்வேச்வரன் பராங்குச பரகலாதிரூபத்தாலே அபிநவமாக ஒரு தசாவதாரம் பண்ணி மேகங்கள் சமுத்ரஜலத்தை வாங்கி ஸர்வோபஜீவ்யமான தண்ணீராக உமிழுமாப்போலே, வேதார்த்தங்களில் வேண்டும் ஸாரதமாம்ஸத்தை ஸர்வருக்கும் அதிகரிக்கலான பாஷையாலே ஸங்கராஹித்துக் காட்டியதாக ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளியிருப்பது ஸாம்ப்ரதாயிகர் அறிந்த விஷயம். ஆக, ஆழ்வார்கள் (பன்னிருவரும்) பகவானுடைய அவதாரங்களேயாம். நாச்சியாரைப் பெரியாழ்வாரோடும், மதுரகவிகளை நம்மாழ்வாரோடும் அந்தர்பாவம் கொண்டு அபிநவ தசாவதாரம் என்று கொண்டனர் பூர்வர்கள்.

"மீனோ டாமை கேழல் கோளரியாய்
வானார் குறளாய் மழுப்படை முனியாய்
பின்னுமி ராமரிருவராய்ப் பாரில்
துன்னிய பரம்தீர் துவரை மன்னனுமாய்க்
கலி தவிர்த்ளிக்கும் கற்கியாய்.....

என்று ஸ்வாமி தேசிகன் மும்மணிக்கோவையில் பூர்வதசாவதாரக்ரமத்தை அருளி,

"வையமமெண் பொய்கை பூதம் பேயாழ்வார்
மழிசையர் கோன் மகிழ்மாறன் மதுரகவி
பொய்யில் புகழ் சோழியர் கோன்விட்டு சித்தன்
பூங்கோதை தொண்டரடிப்பொடி பாணாழ்வார்
ஐயனருள் கலியன்.....

என்று அபிநவதஸாவதாரக்ரமத்தையும் ப்ரபந்த சாரத்தில் அருளிச் செய்தார் பூர்வத்தில் கடைசியானது கல்கி அவதாரம். அபிநவத்தில் கடைசியானது திருமங்கை மன்னனான கலியன் கல்கி அவதாரத்தைப் பற்றிப் பேசும் ஸ்ரீமத் பாகவதம் ஸ்ரீமந் நாராயணன் கல்கி அவதாரம் செய்து வேகமாகச் செல்லக்கூடிய குதிரையின் மேல் ஏறிக் கையில் வாளேந்திப் பூமியிலுள்ள துஷ்டர்களை நிரஸித்துக் கலியைப் போக்குகிறார் என்று,

"பவனே விஷ்ணு யசை: கல்கி: ப்ராதுர்பாவிஷ்யதி1
அஸ்வமாஸுகமாருஹ்ய தேவதத்தம் ஜகத்பதி: 1
அஸினா சாதுதமனம் அஸ்ட ஐஸ்வர்ய குணான்வித:1
விசரன்னாசுனாக்ஷோண்யாம் ஹயேனாப்ரதிமத்யுதி:1
ந்ருபலிங்கசிதோ தஸ்யூன் கோடிஸோ நாஹநிஷ்யதி11

இவ்வாறாகப் பேசுகிறது. அபிநவதசாவதாரத்தின் கடைசி அவதாரமும் ஆடல்மா என்கிற குதிரையில் ஏறிக் கொண்டு, வாளும் வேலும் ஏந்தித் துஷ்டநிக்ரஹம் செய்தருளுமதாயிற்று. அதனாலன்றோ, பரகாலன், கலியன், கலிகன்றி என்றெல்லாம் தன்னை இவரே அழைத்துக் கொள்கிறார். இங்கு, "கலயாமி கலித்வம்ஸம்" "வாழி பரகாலன் வாழி கலிகன்றி", "வையமெல்லாம் மறைவிளங்க வாள்வேலேந்தும் மங்கையர்கோன்" போன்ற ஸ்ரீஸூக்திகளை அவசியம் அனுஸந்தேயம் செய்யக்கடவது.

செந்தமிழ் மணம் கமழும் நமது பரமகம்பீரமான திவ்யப்ரபந்தங்களாய் கலியன் பிற மதத்தினருக்கு காலனைப்போன்று விளங்கினார். "எந்தை தந்தை தம்மான் என்று என்நமர் ஏழ் அளவும் வந்து நின்ற தொண்டர்" (பெரிய திருமொழி 4-9-9) என்று தன்னை வைணவக் குடிமகனாக அறிவித்து மண்ணுய்ய மண்ணுலகில் மனிதருய்யுமாறு ஆறு பிரபந்தங்களை வேதத்திற்கு ஆறு அங்கங்கள் போன்று அருளிச் செய்தார். சித்திரம், மதுரம், விஸ்தரம், ஆசு என்று நான்கு விதமாக இயற்றி சிறப்புற்றதால் ஆழ்வாருக்கு நாலுகவிப் பெருமாள் என்றும் பெயர். இவருடைய ஆறு பிரபந்தங்களில் முப்பது பாசுரங்கரங்களைக் கொண்ட திருநெடுந்தாண்டகம் எல்லோருக்கும் பரமபோக்யமானது என்றால் மிகையாகாது. அதிலும் "மின்னுருவாய்

முன்னுருவில்" என்கிற பாசுரம் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் அடங்கியுள்ள அனைத்துப்பாசுரங்களுக்கும் அமைந்த விளக்கமாகவே அமைந்துள்ளது என பெரியோர்கள் திருவுள்ளம்.

ஒருசமயம் பட்டரின் சீடர் ஒருவர் வடதேசத்தில் பெரிய வித்துவானைச் சந்தித்தார். அப்போது அவர் அம்மஹானிடம் அவரைவிட கல்வியிற் சிறந்தவர் "பட்டர்" திருவரங்கத்திலே வசித்து வருகிறார் எனக் குறிப்பிட்டார். உடனேயே வடக்கத்து வித்துவான் பட்டர் பயின்ற எக்கலையிலும் திருநெடுந்தாண்டகம் விஞ்சியது என பட்டர் கருதியதாக வைணவ மரபு. "மை வண்ண நறுஞ்குஞ்சி" என்ற பாசுரத்திற்கு உரையிடும் பட்டர் "இருவராய் வந்தார்" என்ற சொற்றொடரை பதினெட்டு விதமாக அனுபவிப்பது மட்டுமே இங்கு போதுமான சான்று.

மேலும் "என்னுருவில் நின்றதாய்" எனக் கூறாமல் "என்னுருவில் நின்ற எந்தை" என்று கூறும் ஆழ்வார்,

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே"

என்ற மகனைத் திருத்தி வழிப்படுத்துதல் தந்தையின் கடமை என்ற புறநானூற்றுப்படி பகவான் தன்னை திருத்தியாட்கொண்ட விதத்தை நமக்குத் தெரிவிக்கிறார்.

திருநெடுந்தாண்டகத்திலுள்ள முப்பது பாசுரங்களையும் மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். ஒன்று முதல் பத்து பாசுரங்களில் ஆழ்வார் தாமான தன்மையில் பேசுகிறார். பதினொன்று முதல் இருபது வரையிலான பாசுரங்களில் அவருடைய தாய் கூறுவதுபோல் அமைந்துள்ளன. இருபத்தொன்று முதல் முப்பதுவரை தோழிகளுடன் பேசுவதாக அமைக்கப்பட்டுள்ளன. இதை பட்டர் உரையிடும்போது "மச்சித்தா! மத்கதப்ராணா!" என்கிற பகவத்கீதை (10–9) யை இங்கு ஒப்பிடுகிறார்.

ஸம்போந்தோபாய பலங்களில் உணர்த்தி, துணிவு, பதற்றமாகிற பிரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி, தாயார், மகளென்று பேர். (சூர்ணிகை 133) என்று ஆசார்ய ஹ்ருதசூக்தி இங்கு அவசியம். அனுஸந்தேயம் ஸம்பந்தத்தில் உணர்த்தியாகிற பிரஜ்ஞாவஸ்தைக்குத்

தோழி என்று பெயர். உபாயத்தில் துணிவாகிற பிரஜ்ஞாவஸ்தைக்குத் தாய் என்று பெயர். பதற்றமாகிற ப்ரஜ்ஞாவஸ்தைக்கு மகளென்று பெயர். மூன்று காலங்களையும் அறியும் நிலையே ப்ரஜ்ஞாவஸ்தை எனப்படும் விரிவுக்கஞ்சி நிற்போமிங்கு.

மேலும், திருவஷ்டாக்ஷரம், த்வயம், சரமஸ்லோகம் இம்மூன்றின் பொருள் விளக்கம், சாரீரக்காஸ்த்ரமான ப்ரமுஹ ஸூத்ரத்தின் விளக்கங்கள் எல்லாம் திருநெடுந்தாண்டகத்தில் சொல்லப்பட்டதாக நம் பூர்வர்களின் திருவுள்ளம்.

இவ்வாறாக, போற்றப்படும் திருநெடுந்தாண்டகத்தை ஆய்ந்தெடுத்து பூர்வர்களின் வியாக்கியானத்துடன் தொல்காப்பியம் போன்ற தமிழ் இலக்கியத்தின் தூண்கள் போன்ற நூல்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்து புத்தக வடிவத்தில் அமைத்து இருக்கும் திருமதி. அகிலாவின் முயற்சியை மிகவும் பாராட்டுகிறேன். முப்பது பாசுரங்களையும் ஆராய முப்பதுக்கும் மேற்பட்ட ஆய்வேடுகள் தேவைப்பட்டாலும் இப்புத்தகத்தில் முக்கியமான நுண்ணிய சீரிய கருத்துகளை எளிய நடையில் துல்லியமாகவும், தெள்ளத் தெளிவாகவும் தெரிவித்திருக்கிறார். இது மிகவும் ஆனந்தத்தைக் கொடுப்பதாக உள்ளது. இவர் இம்மாதிரி படைப்பதற்கு உறுதுணையாக நிற்பது இவருக்கு ஏற்பட்டுள்ள குடிப்பேறு, நல்லோர்களின் சேர்க்கை, ஆசி, அருள் என்றால் அது மிகையாகாது.

இவர் இம்மாதிரி இன்னும் பல நூல்களை ஆராய்ந்து வெளியிட்டு ஆஸ்திக தமிழ் மக்களை ஆனந்தக் கடலில் மூழ்கடிக்க இவருக்கு எல்லாவிதமான பொருளையும், தன்னருள் மழையாய் விளைவிக்க வேணுமாய் பெருந்தேவித் துணைவனான வரதராசனை வேண்டிக் கொள்கிறேன்.

**காணியம்பாக்கம் இளையவல்லி தரணீதரன்**

# அணிந்துரை

*ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
*தாழ் வாதுமில் குரவர் தாம்வாழி - ஏழ்பாரும்*
*உய்ய அவர்களு ரைத்தவைகள் தாம்வாழி*
*செய்ய மறை நன்றுடனே சேர்ந்து*

**- உபதேச ரத்தின மாலை**

தமிழிலக்கிய வளர்ச்சியில் ஆழ்வார்களின் தெய்வத்தமிழ் பனுவல்கள் முக்கிய பங்கை வகிக்கின்றன. ஆழ்வார்கள் தமிழ் மொழியாலேயே திருமாலைக் கண்டவர்கள் "கமலக்கண்ணன் என் கண்ணிலுள்ளான் காண்பன்", "நம்பியை நான் கண்டபின்", "திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்றவையே இதற்குச் சான்று, ஆழ்வார்களுக்கு பக்தியை தமிழ்மொழியாலே இறைவன் வளர்த்ததை, "விதையா நற்றமிழை வித்தி என்னுள்ளத்தை நீ விளீத்தாய், கற்ற மொழியாகிக் கலந்து" என்று திருமழிசை ஆழ்வார் அறிவிப்பர். பூதத் தாழ்வார் "நாரணர்க்கு ஞானத்தமிழ் புரிந்த நான்" என்றும், "இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன் பெருந்தமிழன்" என்று பேசுகிறார். திருமங்கையாழ்வாரோ ஒலிமாலை பாடி, "இருந்தமிழ் நூற்புலவன்" என்று தம்மைக் குறிப்பிட்டு மகிழ்கிறார்.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பிரபந்தங்கள் ஆறு. அவற்றுள் இறுதிப்பிரபந்தமாக அமைந்தது திருநெடுந்தாண்டகம். தாண்டகம் என்பது தமிழில் இறைவனைப் பற்றிப் போற்றப்படும் பிரபந்தமாகும். இது அறுசீர் கொண்ட அளவிலான நான்கு அடிகளோ அல்லது எண்சீர் கொண்ட அளவொத்த அடிகள் நான்கினாலாவது அவரவர் விருப்பமான தெய்வத்தைப் போற்றிப் பாடும் பிரபந்தம் என்பது மரபு. அறுசீர் கொண்டது குறுந்தாண்டகம் என்றும் கூறுவர். நெடுந்தாண்டகத்தில் அடிகள்தோறும் 26 எழுத்துக்கு மேற்பட்டிருக்

கலாம் என்பர். இத்தகைய நெறிகளுக்கு உட்பட்டு பாடப்பட்ட பிரபந்தமே திருமங்கையாழ்வாரின் திருநெடுந்தாண்டகமாகும்.

முப்பது பாசுரங்களால் அமைந்த இத்தாண்டகம் திருமங்கை மன்னரின் தலைசிறந்த பிரபந்தமாகும். முதல் பிரபந்தமான பெரிய திருமொழியில் ஆழ்வார், எட்டெழுத்து மந்திரத்தில் நிலையுற்று, திவ்யதேச தசாவதார அனுபவங்களை நிறைவு செய்து தேஹ ஸம்பந்தத்தை அறுத்துத் தரவேண்டும் என்று திருமாலை வேண்டினார். இரண்டாவது பிரபந்தமான திருக்குறுந்தாண்டகத்தில் தன்னை அனுபவிக்கும் ஈடுபாடு மேலும் வளரட்டும் என்று எம்பெருமான் ஆழ்வாருக்கு முகம் காட்டவில்லை. ஆழ்வாரோ திருமாலை விட்டு ஒரு கணமும் தரிக்க முடியாதவராகி, எம்பெருமானை வாயாலே பேசியும், தலையாலே வணங்கியும் நெஞ்சாலே நினைந்தும் தரிக்கப் பார்த்தவர்.

இந்த அனுபவம் விடாமை போலும் மிகுதியாகப் பிறப்பித்தது. அதனால் மூன்றாவது ப்ரபந்தமான திருவெழுகூற்றிருக்கையிலே ஆராவமுதனை ஆர்த்தியோடு சரணம் புகுந்தார். இப்படி சரணம் புகுந்ததும், இறைவனைப் பெறாமையால் மடல் விடுத்தும், மடலூர்வன்... என்று அவதாரங்களில் உண்டான நீர்மையை அழிக்கிறேன் என்று சிறிய திருமடலில் தெரிவித்தும் பாராமுகமாயிருந்தான் இறைவன். அதனால் பெரிய அஸ்திரத்தை விடுவோம் என்று பெரிய திருமடலைப் பாடி, நீர்மைக்கு எல்லை நிலமான, கோயில்களில் நின்ற நீர்மையை அழிக்கிறேன் என்று அச்சுறுத்தினார். இனியும் முகம் காட்டாவிடில், உலக மக்கள் இறைவன் உண்டு என்ற நம்பிக்கையை இழந்துவிடுவர் எண்ணிய எம்பெருமான் முகம்காட்ட, தாம் அவனைப் பெற்றபடியைச் சொல்லி, தம்முடைய இறுதிப் ப்ரபந்தத்தை தலைக்காட்டி, தம் இறைஅநுபவத்தை வெளியிடுகிறார் "திருநெடுந்தாண்டகத்தில்!"

திருநெடுந்தாண்டகம் மூன்று பத்துகளாக அமைந்தது. முதல் பத்துப் பாசுரங்கள் தாமான தன்மையில் இறைவனிடம் ஈடுபட்டுப் பேசும் பேச்சாக அமைந்தது. அடுத்த பத்துப் பாசுரத்தில் தலைவனைப்

பிரிந்த தலைவியின் ஆற்றாமை கண்டதாய் இரங்கிக் கூறும் பாசுரமாகும். அடுத்த பத்துப் பாசுரங்கள் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல் பேசுவது, 26 ஆவது பாசுரம் வண்டுவிடு தூது, 27ஆவது பாசுரம் நாரைவிடுதூது, 28ஆவது பாசுரம் பறவைகளைத் தூது விட்டும் தலைவன் வரக்காணாமையினால், அவனுடன் ஊடல் கொண்டமையை தோழிக்குக் கூறுவது; 29ஆம் மற்றும் 30ஆம் பாசுரங்களில் தாமான தன்மையில்தாம் அவனைக் கண்ட செய்தியைச் சொல்லி ப்ரபந்தம் நிறைவு செய்யப்படுகிறது. ஒருசமயம் இந்த ப்ரபந்தத்தை திருமங்கையாழ்வார் தன் வாழ்நாளில் திருவரங்கர் முன்பு தேவகானத்தி இசைத்துப்பாடி உருகினார். அதனை சகந்த அரங்கர், ஆழ்வாரைப் பார்த்து உமக்குவேண்டிய வரத்தைப் பெற்றுக்கொள்ளும் என்று தெரிவித்தார். உடனே திருமங்கையாழ்வார் மார்கழி மாதத்தில் வைகுண்ட ஏகாதசிப் பெருவிழாவில் ஆழ்வார்களின் பாசுரங்களை தினந்தோறும் கேட்டு மகிழ வேண்டும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களை வடமொழி வேதம் போன்று, திராவிடவேதமாக அங்கீகாரம் செய்ய வேண்டும் என்று வேண்டினார். திருவரங்கரும் ''அப்படியே ஆகுக'' என்று திருவாய் மலர்ந்து அருளினார். அதனால் திருவரங்கத்தில் வைகுண்ட ஏகாதசித் திருவிழாவின் முதல்நாள் திருநெடுந்தாண்டகத்தை அரையர் சுவாமிகள் இசையோடு தேவகானத்தில் இசைத்து பகல் – பத்துவிழா தொடங்கப் பெறுகிறது. இதிலிருந்து திருநெடுந்தாண்டகத்தின் தனிச்சிறப்பபை உணரலாம்.

அப்படிப்பட்ட சிறந்த ப்ரபந்தத்தில் உள்ள அகப்பொருளை திருமங்கையாழ்வாரின் நாயகி பாவநிலையை இந்நூல் நன்கு ஆய்வு செய்கிறது. முதல் இயலில், அகப்பொருளின் தத்துவத்தை விரிவாக விளக்கி, திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் எவ்வாறு அமைந்துள்ளது என்பதையும், ஆழ்வாருடைய முதல் ப்ரபந்தமான பெரியதிருமொழியில் இத்தகைய அமைப்பு முறையை எவ்வாறு படைத்துள்ளார் என்பதை ஒப்புநோக்கும் அணி செய்கிறது. திருநெடுந் தாண்டகத்தில் கூறப்பட்டு உள்ள தாய் தலைவி கூற்றுக்கள் அனைத்தும் தொல்காப்பியக் களவியல் பகுதியில் உள்ள

கூற்றுக்களோடு எவ்வாறு பொருந்தியுள்ளன என்பதையும், உலகப் பொதுமறையான திருக்குறளோடு ஒத்துள்ளமையால் இந்நூல் ஆசிரியை விரிவாகவும், அழகாகவும் ஆராய்ந்து அளித்துள்ளது மிகவும் பாராட்டப்படவேண்டியதாகும். அகப்பொருளின் விளக்கத்தை அறிந்து அகத்துறை அமையப் பதிகங்கள் பாடுவதில் நம்மாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் சிறந்தவர்கள் என்பதைக் காட்டி இறைவனை அடையும் வழிகளில் "ஞானத்தில் தம்பேச்சு, ப்ரேமத்தில் பெண் பேச்சு" என்று நாயகி பாவத்தின் விளக்கத்தைக் கூறி, தொல்காப்பியர் களவியல் பகுதிகளில் ஒன்பது இடங்களைச் சுட்டிக் காட்டி இவ்வொன்பதில் எந்தெந்த கூற்றுக்கள் திருநெடுந்தாண்டகத்தில் பொருந்தியுள்ளன என்பதை (1) கட்டுவிச்சி குறி சொல்லுதல் (2) தலைவியின் நிலைகண்டு தாம் இரங்குதல் (3) கண்துயில் மறுத்தல் (4) துன்பத்துப் புலம்பல் (5) உறுபெயர் கேட்டல் (6) ஒப்புவழி உவத்தல் (7) கனவொடு மயங்கல் (8) இன்பத்தை வெறுத்தல் (9) அறத்தொடு நிற்றல் ஆகியவைகளை விளக்கி நிறையழித்தூர் நிற்கும்நிலை, காட்சி வேட்கையால் ஏற்பட்ட இழப்பு, தலைவனால் பெற்றது, இகழ்ந்தது, தூது அனுப்புதல், நிறைவாக தலைவி தன் முடிவை உரைத்தல் ஆகியவற்றை அலசி, ஆராய்ந்து, ஆழ்வாரின் நாயகி பாவ உணர்வுகளையும், செயல்பாடுகளையும் ஆசிரியை படம் பிடித்துக் காட்டி உள்ளது மிகவும் போற்றத்தக்கது. பரகால நாயகி தான்பட்ட துயரங்களையெல்லாம் அவன் முன்னிலையிலேயே வெளிப்படுத்துவேன், அவனால் பாராட்டப் பட்ட என் உறுப்புகள் எல்லாம் மகிழ்வடையும்படி அவன் முன்னிலையிலேயே உயிரை முடித்து அமைதியுறுவேன் என்று தெரிவிப்பது, நம்மாழ்வாரின் கீழ்க்கண்ட திருவாய்மொழி அனுபவத்தை,

*"ஏழ நண்ணிநாமும் நம்வானநாடனோடொன் றிறோம்*
*பழன நன்னாரைக் குழாங்கள் காள்! பயின்றெனினி-*
*இழை நல்ல வாக்கையும் பையவே புயக் கற்றது*
*தழை நல்ல வின் பந்தலைப் பெய்து எங்கும் தழைக்கவே!"*

(9-5-10)

ஒத்துள்ளது உரைக்கத்தக்கது.

இரண்டாவது இயலில் திருநெடுந்தாண்டகக் கண்ணோட்டத்தில் நம்மாழ்வார் திருமங்கையாழ்வாரின் அகத்துறை அனுபவம் ஒப்பு நோக்கப்படுகிறது. இருவருக்கும் உள்ள ஒற்றுமை திருவாய்மொழித் தோழி, மகள் கூற்றுகளும், திருநெடுந்தாண்டகத்தில் இல்லை என்பதும் தெரிவிக்கப்பட்டு, இருநாயகிகளின் பாசுரங்கள் அமைப்பில் வேறுபட்டாலும் கருத்துக்களின் ஆழத்தில் ஒப்புமையே காணப்படுகின்றன என்பது விளக்கப்படுகிறது.

மூன்றாம் இயலில் திருநெடுந்தாண்டகத்தில் காணப்படும் புராணச்செய்திகள், தத்துவக் கருத்துக்களான இறைநிலை, உயிர்நிலை, தக்கநெறி, ஊழ்வினை, வாழ்வினை ஆகியவைகளையும், ஆழ்வார் அனுபவிக்கும் கூர்ம, வராக, வாமன, பரசுராம, இராம, கிருஷ்ண அவதாரங்களின் மாட்சியையும், அந்தந்த புராணங்களில் கூறப்பட்டுள்ள செய்திகளோடு ஒப்புநோக்கி வளர்ந்துள்ளது, படிப்பதற்கு இனிமையாக உள்ளது. குறிப்பாக சைவ புராணமாகிய சிவபுராணமும், கந்தபுராணச் செய்திகளும், திருக்கோவிலூர் தலபுராணமும் "நம்பிவளைக் காரியான" துர்க்கை வரலாறும் ஆழ்ந்து அனுபவிக்கத்தக்க செய்திகளாகும்.

ஆழ்வார்கள் அருளிச் செயலுக்கும் ஏற்றமளிப்பது அவற்றின் உரைநயங்களே ஆகும். நாலாயிரப் பாசுரங்களுக்கும் அழகிய நயவுரை அருளிச் செய்தவர் உரைவேந்தரான பெரியவாச்சான் பிள்ளை ஆவார். அவருடைய உரைநயங்களுக்கு ஈடுஇணை ஏதுமில்லை. நாலாயிரத்திற்கும் உரை அருளிச் செய்த பெரியவாச்சான்பிள்ளை கடைசி பிரபந்தமான திருநெடுந்தாண்டகப் பாசுரங்களுக்கு உரை அருளும்போது, ஆழ்வாரின் நிலையில் தாமே முழுமையாய்த் தோய்ந்து தேனும், பாலும், கன்னலும் அமுதமாகித் தித்திக்கும் உரையை அருளிச் செய்துள்ளார். அந்த அனுபவத்தையும், உரைவளத்தையும், அவர் காட்டியுள்ள நயங்களையும் இந்நூல் ஆசிரியை தானும் பரகாலநாயகி போலவே ஆழங்கால்பட்டு "மைவண்ண நறுங்குஞ்சி" என்ற இருபத்தோராம் பாசுரத்திற்கான உரைவிளக்கத்தை மிக

எளிமையாகக் கொடுத்து நம்மையும் ஆழ்வார் அனுபவத்தில் ஆழ்ந்து திளைக்கச் செய்கிறாள்.

ஆக, 'திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள்' என்ற இந்நூல் பேராசிரியை திருமதி அகிலா அவர்களின் அருமையான படைப்பு. மிகவும் கடினமான அகத்துறையில் உள்ள நூல்களை எல்லாம் அலசி, ஆராய்ந்து, ஒப்புநோக்கி படைத்துள்ள இந்நூல் ஆசிரியை அவர்களின் ஆழ்ந்த அறிவு, கடின உழைப்பு, ஆராய்ச்சித் திறன், ஆகியவற்றிற்கு நன்கு சான்று பகருகின்றது. ஆழ்வார்கள் பிரபந்தங்களில் குறிப்பாக, திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் பற்றி விரிவாக ஆய்வு செய்யும் சிறந்த நூலும், முதல் நூலும் இதுவே ஆகும். இந்நூலை எடுத்துப் படிக்க ஆரம்பித்தவுடன் முழுமையாகப் படித்து நோக்கும்படியான நடையில் எழுதப்பட்டுள்ளது குறிப்பிட வேண்டியதாகும். இவ்வாறு சிறந்த நூலைப் படைத்த பேராசிரியை திருமதி அகிலாவிற்கு தமிழ்கூறும் நல்லுலகமும், குறிப்பாக வைணவ உலகமும் மிகவும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளன. பேராசிரியை திருமதி. அகிலா அவர்கள் ஆழ்வார் பாசுரங்களில் இதுபோன்ற பல ஆய்வுகளை மேற்கொண்டு மேலும் பற்பல நூல்களைப் படைத்து வளம் சேர்க்க வேண்டுமென உளமார வாழ்த்துகிறேன்.

**05. 10. 2006** **முனைவர் அ. வே. அரங்காச்சாரி**

# வாழ்த்துரை

**முனைவர் எஸ்.குமுதா**
**முதல்வர்**
**பாரதிதாசன் அரசினர் மகளிர் கல்லூரி**
**[தன்னாட்சி],**
**புதுச்சேரி- 8**

திருமதி இரா.அகிலா, எமது கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றி வருபவர். வைணவத் தமிழ் வளர்த்த ஆழ்வார் பாசுரங்களில் தோய்வும் பற்றும் உடைய இவர், திருமங்கையாழ்வார் இயற்றிய திருநெடுந்தாண்டகம் பற்றிய ஆய்வாக இந்நூலை உருவாக்கியுள்ளார்.

ஒரு மொழியின் இரு கண்களாக விளங்குவன இலக்கியமும், இலக்கணமும். தமிழ்மொழியின் இலக்கணச் செழுமைக்கு நற்சான்றாக விளங்கும் பொருள் இலக்கணத்தில் சிறப்புக்குரியது அகப்பொருள். அப்பொருள் திருநெடுந்தாண்டகத்தில் இடம்பெறும் விதங்களை எளிமையாக, அழகாக எடுத்துக் காட்டி, எல்லோரும் படிக்கும் வண்ணம் இந்நூலை எழுதியிருக்கிறார் திருமதி. அகிலா.

இந்நூல் அனைவரையும் சென்றடையவேண்டும் என்ற நோக்கோடு, இதனை வெளியிடத் திருமலை திருப்பதி தேவஸ்தானம் பொருளுதவி செய்திருக்கின்றது என்பது அறிய மகிழ்ச்சி. அழகுற இந்நூலை வடிவமைத்து வெளியிடும் கபிலன் பதிப்பகத்தாருக்கும், இந்நூலாசிரியர் திருமதி இரா. அகிலா அவர்களுக்கும் எனது வாழ்த்துகள்.

இன்னும் இதுபோல் நல்ல நூல்களை அவர் தமிழுக்குத் தரவேண்டும் என்று வாழ்த்தி மகிழ்கிறேன்.

வாழ்த்துகளுடன்,

நாள்- 09.11.2006. **முனைவர் எஸ். குமுதா**

# பதிப்புரை

மகாகவி பாரதியாரின் இனிய நண்பரான குவளைக் கண்ணனாரின் பேத்தியும், நாட்டுவிடுதலைக்காகப் போராடிய தீரர் புதுச்சேரி ஸ்ரீ உ.வே.ரு.ஞ. ராமாநுஜாச்சாரியார், கனகவல்லி தம்பதியரின் திருமகளுமாகிய திருமதி இரா.அகிலா, புதுவை பாரதிதாசன் அரசினர் மகளிர் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றி வருபவர். வைணவத் தமிழில் ஆழ்ந்த தோய்வும் பற்றும் கொண்ட இவர்தம் கடின உழைப்பில் விளைந்த இனிய நூல் 'திருநெடுந் தாண்டகத்தில் அகப்பொருள்'.

இறைவனை நாயகனாய்க் கொண்டு நாயகியாய்த் தம்மை பாவித்து ஆழ்வார்கள் பாடிய அரும்பாக்கள் என்றும் மூப்படையாக் கன்னிமையைத் தமிழுக்கு அளிக்கும் ஆற்றலுடையவை. அதன் சீரிளமைத் திறம்பேணும் சிறப்புமிகு இலக்கணங்களுள் தொன்மையது தொல்காப்பியம். அத்தொல்காப்பிய அகமரபின் அடிப்படையில் திருமங்கையாழ்வார் அருளிச் செய்த திருநெடுந்தாண்டகத்தை ஆய்வு செய்து தக்க சான்றுகளின் கட்டமைப்புகளோடு அழகுறத் தந்திருக்கும் இந்நூலின் நடை, எளியது; இனியது; எல்லாத் தரப்பினரும் எடுத்துப் படிப்பதற்கு ஏற்றது.

தந்தையார் காட்டிய தமிழார் சமயமரபேந்திய இக்குலக் கொடியின் இனிய இந்நூலைத் தமிழ்கூறும் நல்லுலகிற்கு அளிப்பதில் மகிழ்வடைகிறோம். இன்பம் யாவர்க்கும் ஆகட்டும்.

---

# பொருளடக்கம்

# என்னுரை

*"நாராயணன் படைத்தான் நான்முகனை நான்முகனுக்கு*
*ஏரார் சிவன் பிறந்தான் என்னும் சொல்"*

என்று இராமானுச நூற்றந்தாதி பாசுரம் கூறுவது போல், திருமால் படைக்கும் கடவுளாகவும், காக்கும் கடவுளாகவும் திகழ்கிறான். அத்திருமால் வைணவத்தின் விடிவெள்ளி. அற்புத நந்தா விளக்கு. அத்தகைய திருமாலின் பெருமைகளையும், அவதாரச்சிறப்புகளையும் பன்னிரு ஆழ்வார்கள் பாசுரங்களாகப் பாடியுள்ளனர். அப்பாசுரங்களே நாலாயிரத் திவ்யப் பிரபந்தமாகும்.

பன்னிரு ஆழ்வார்களில், "மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர் மங்கையர்கோன்" என்று மணவாள முனிகள் உபதேசரத்தினமாலையில் அருளிச் செய்தார். 'மாயோனை வாள்வலியால் மந்திரம் கொள் மங்கையர்கோன்' என்ற தனியனில் அருளிச்செய்தபடியே வாள்வலியாலே திருமணங் கொல்லையிலே எம்பெருமானிடமிருந்து திருமந்திரத்தை உபதேசிக்கப் பெற்றவர், மயர்வற மதிநலமருளப் பெற்ற திருமங்கையாழ்வார்.

அத்தகைய ஆழ்வாரின் மீது அளவற்ற பக்தி கொண்ட எனக்கு ஆழ்வார் அருளிய ஏதேனும் ஒரு பாசுரத்தை ஆய்வு செய்ய வேண்டும் என்று எண்ணங்கொண்டேன். இவர் பாடிய ஆறு பாசுரங்களுள் திருநெடுந்தாண்டகம் இறுதிப் பிரபந்தமாகும். இதைப் பாசுரமாக மட்டுமே கொள்ளாமல் இலக்கணத்தோடு பொருத்திப் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட, அதன் விளைவாகத் தோன்றியதே இந்நூல். இத்தகைய பாசுரத்தை ஆய்வுக் கண்ணோட்டத்தோடு அணுகக் கூடிய வாய்ப்பினை எனக்கு ஏற்படுத்தித் தந்தது மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்.

மேலும், ஒல்காப்புகழ் பெற்ற இலக்கண நூலான தொல்காப்பியத்தில் உள்ள, அகத்திணைஇயல், களவியல், மெய்ப்

பாட்டியல் போன்ற நூற்பாக்கள் இந்திருநெடுந்தாண்டகத்தில் எவ்வாறு பொருந்தியுள்ளன என்பதையும் ஆங்காங்கே, பெரிய திருமொழி, திருவாய்மொழி போன்ற நூல்களில் உள்ள பாசுரங்களையும், மேற்கோள் காட்டியுள்ளேன். ஒரு சில இடங்களில் இலக்கிய நூல்களில் உள்ள பாடல்களையும் மேற்கோளாகக் காட்டியுள்ளேன்.

திருநெடுந்தாண்டகத்தில் முதல் இயலில் தாய், தலைவியின் கூற்றுக்கள் எப்படி அமைந்துள்ளன, அவை எவ்வாறு தொல்காப்பியத் தோடு பொருந்தியுள்ளன என்பதையும் கூறியுள்ளேன். திருமங்கை யாழ்வார் தன்னைப் பெண்ணாகப் பாவித்து எவ்வாறு பெண்ணின் உணர்வை இப்பாசுரத்தில் புலப்படுத்துகிறார் என்பதையும் கூறியுள்ளேன்.

இத்தகைய பாசுரத்தின் சாராம்சத்தை எனக்குக் கூறி, என் வளர்ச்சியில் அக்கறை கொண்டு அவ்வப்போது எனக்குக் கருத்துக்களை வழங்கிய கல்விக் கடல் தி.வே. கோபாலையர் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

என்னை மேலும் மேலும் சிந்திக்கத் தூண்டி நூலாக்கத்திற்கு ஊக்கப்படுத்தியும், நான் கேட்ட உடனேயே பல பணிகளுக்கிடையில் நூலினைப் படித்து ஒரு சிறந்த அணிந்துரையோடு வாழ்த்துரையும் நல்கிய முனைவர் அ.வே. அரங்காச்சாரிஸ்வாமி அவர்களுக்கும் என் நன்றி.

பல்வேறு சிரமங்களுக்கிடையே இந்நூலைப் படித்து வாழ்த்துரை அருளிய ஸ்ரீஅப்பன் பரகால ராமானுஜ எம்பார் ஜீயர் சுவாமி அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைச் சிரம் தாழ்த்திக் கரம் கூப்பித் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாழ்த்து மடல் நல்கிய புதுவைப் பல்கலைக்கழகச் சமஸ்கிருதத் துறைத்தலைவர் ஸ்ரீ கே. இ. தரணீதரன் அவர்களுக்கும், வாழ்த்துரை நல்கிய எம் கல்லூரியின் வணக்கத்திற்குரிய முதல்வர் முனைவர் திருமதி. எஸ். குமுதா அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

என் ஆய்வுக்கு ஊக்கப்படுத்தி வழிகாட்டிய ஆய்வு நெறியாளர் முனைவர் இரா. இராஜகோபாலாச்சாரி அவர்களுக்கும், என் கல்வி வளர்ச்சியில் அக்கறை கொண்டு அவ்வப்போது திருத்தங்கள் செய்து வழிகாட்டிய என் அன்புச் சகோதரி திருமதி முனைவர் வி. தாமரைச்செல்விக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இவ்வாய்வை நூலாக அச்சிட பொருளுதவி அளித்த திருப்பதி தேவஸ்தானத்தாருக்கு என் நன்றி என்றும் உரித்து.

இந்நூல் வெளிவர எனக்கு ஊக்கமளித்த பேராசிரியர் திரு. சொ. சேதுபதி அவர்களுக்கும், இந்நூலைச் சிறப்புற வடிவமைத்துக் கொடுத்த தம்பி சொ. அருணன் அவர்களுக்கும் என் நன்றி. இந்நூலினைக் குறித்த நேரத்தில் அச்சிட்டு உதவிய கபிலன் பதிப்பகத்தார்க்கும் என் நன்றி.

என் ஆய்வுப் பணி சிறக்கவும் எனக்குத் தூண்டு கோலாகவும் இருந்த என்னுடைய அனைத்துப் பணிகளிலும் பங்குகொண்டு என்னுடன் ஒத்துழைத்த, என் பெற்றோர்களுக்கும், என் சகோதரர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலில் உள்ள நிறைகளை ஏற்றும், குறைகளைக் களைந்தும் இந்நூலினை வரவேற்று ஆதரவு தரும்படி சான்றோர்களைப் பணிவுடன் வேண்டுகிறேன்.

**02.11.2006** **இரா. அகிலா**
**புதுச்சேரி.**

# முன்னுரை

தமிழிலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கிய காலம் குறிப்பிடத் தக்க இடத்தைப் பெறுகிறது. இக்காலகட்டத்தில் சைவமும், வைணவமும் ஓங்கி இருந்தன. சைவ சமயத்தை அறுபத்துமூன்று நாயன்மார்கள் தழைத்தோங்கச்செய்ததுபோல், பன்னிருஆழ்வார்களும் தங்களுடைய பாசுரங்களால் வைணவ சமயத்தைத் தழைக்கச் செய்தனர். இப்பன்னிரு ஆழ்வார்களில் "திருமங்கை ஆழ்வார்" குறிப்பிடத் தக்கவர். அவருடைய பாசுரங்களே இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப் படுகின்றன.

**ஆய்வுத் தலைப்பு**

திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் என்பது இவ்வாய்வின் தலைப்பாகும். திருமங்கையாழ்வார் அருளிய பாசுரங்களில் "திருநெடுந்தாண்டகம்" மட்டும் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றது. இப்பாடல்களில் அகப்பொருள் செய்திகளை இவர் எவ்வாறு கையாண்டுள்ளார் என்பதை ஆய்வு செய்யும் முகமாக இவ்வாய்வு உருவாக்கப் பெற்றுள்ளது.

**ஆய்வு நோக்கம்**

ஆழ்வார்கள் இறைவனை, அடைவதற்காகப் பல பாசுரங்களைப் பாடியுள்ளனர். அவற்றுள், அவர்கள் எளிமையாக இறைவனை அடைவதற்குரிய வழியாக "நாயகன் நாயகி" பாவ முறையைத் தேர்ந்தெடுத்துள்ளனர். இவ்வணுகுமுறையில் தன்னைத் தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் பாவித்துப் பல பாசுரங்கள் பாடியுள்ளனர். அவற்றுள் அகப்பொருள் கருத்துகள் எவ்வாறு சொல்லப்பட்டுள்ளன என்பதை ஆராய்வதற்கே இவ்வாய்வு மேற்கொள்ளப்பெற்றது.

### ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு விளக்கமுறை ஆய்வு முறையில் மேற்கொள்ளப் பெற்றுள்ளது. ஓரிரு இடங்களில் கருத்துக்களை ஒப்பு நோக்குவதற்காக ஒப்பீட்டு அணுகுமுறையும் இவ்வாய்வில் மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

### ஆய்வு மூலங்கள்

திருநெடுந்தாண்டகம் முதன்மை மூலமாகக் கொள்ளப் பெற்றுள்ளது. சில இடங்களில், தொல்காப்பியம் (பொருளதிகாரம்) சங்க இலக்கியங்கள், திருவாய்மொழி, பெரியதிருமொழி நூல்களும் துணைமைமூலங்களாகக் கொள்ளப்பெற்றுள்ளன. மேலும் அகப்பொருள் தொடர்புடைய ஆய்வுநூல்களும், பக்தி இலக்கியத்திற்குத் தொடர்புடைய ஆய்வுநூல்களும் துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

### ஆய்வு எல்லை

திருமங்கை ஆழ்வார் அருளிய ஆறு பிரபந்தங்களுள் "திருநெடுந்தாண்டகம்" மட்டும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. இதில் உள்ள முப்பது பாசுரங்கள் மட்டுமே ஆய்வுக்கு உட்படுத்தப் பட்டுள்ளன. அகப்பொருள் கருத்துக்களை ஒப்பிடுவதற்காகத் திருமங்கையாழ்வார் அருளிய பெரிய திருமொழிப் பாசுரங்களில் அகப்பொருள் பாசுரங்களும், நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் இடம் பெற்றுள்ள அகப்பொருள் பாசுரங்கள் மட்டும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. திருநெடுந்தாண்டகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை எழுதிய உரைநயத்தை அறிவதற்கு ஒரே ஒரு பாசுரம் மட்டும் "மைவண்ண நறுங்குஞ்சி" என்ற பாசுரம் சான்றாகச் சுட்டப்படுகிறது. இவற்றை ஆய்வு எல்லைகளாகக் கொண்டு இவ்வாய்வு அமைந்துள்ளது.

### ஆய்வுப் பகுப்பு

இந்த ஆய்வு, முன்னுரை, ஆசிரியர் வரலாறு, கதைச் சுருக்கம்,

முடிவுரை ஆகியவை நீங்கலாகப் பின்வரும் நான்கு இயல்களைக் கொண்டது. அவையாவன.

1) திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள்
   - அ. தாய் கூற்று
   - ஆ. தலைவி கூற்று
   - இ. பெரிய திருமொழியும், திருநெடுந்தாண்டகமும்.
2) திருநெடுந்தாண்டக அடிப்படையில் நம்மாழ்வாரும், திருமங்கை ஆழ்வாரும்
3) திருநெடுந்தாண்டகத்தில் காணப்படும் பிற செய்திகள்
   - அ. புராணம்
   - ஆ. தத்துவம்
   - இ. அவதாரம்
4) பெரியவாச்சான்பிள்ளை உரைநயம் ஆகியனவாம்.

## 1. திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள்

அகம் என்பது எதை உணர்த்துகிறது? அகவாழ்க்கைக்கு அடிப்படையாக இருப்பது இன்பம்; அவ்வின்பம் எப்படிப் பெறப்படுகிறது? இன்பம் என்பது எத்தனை வகைப்படும் என்பதைக் கூறுகிறது. மக்களிடத்தில் செல்வாக்குப் பெற்ற அகப்பொருள், தெய்வத்திடம் மக்கள் கொண்ட ஈடுபாட்டைத் தெரிவிக்கப் பயன்படுகின்ற முறையை, ஆழ்வார்கள் தாயாகவும், தலைவியாகவும் தம்மைக் கற்பனை செய்து கொண்டு, அகப்பொருள் துறையை அமைத்துப் பாசுரங்கள் பாடுகின்ற முறையை இவ்வியல் உணர்த்துகிறது.

## 2. திருநெடுந்தாண்டக அடிப்படையில் நம்மாழ்வாரும், திருமங்கையாழ்வாரும்

நம்மாழ்வாரின் தோற்றம், அவர் இறையருள் பெற்றநிலை அவர் பாடிய பாசுரங்களான திருவாய்மொழியின் அமைப்பு, அப்பாசுரங்களின் எண்ணிக்கை, திருவாய்மொழி, திருநெடுந்தாண்டகம் பாசுரங்களின் ஒற்றுமை ஆகியவற்றைப் பற்றி இவ்வியல் கூறுகிறது.

**3. திருநெடுந்தாண்டகத்தில் காணப்படும் பிற செய்திகள்**

**அ) புராணம்**

புராணம் என்பது என்ன? வேதகாலத்தில் எவ்வாறு புராணங்கள் தோன்றின? திருமால் எடுத்த அவதாரங்களில் எந்தெந்த அவதாரங்களைப் பற்றித் திருநெடுந்தாண்டகம் கூறுகிறது என்பதைப் பற்றிய விளக்கமான செய்திகளை இவ்வியல் கூறுகிறது.

**ஆ. தத்துவக் கருத்து**

தத்துவக் கருத்துக்களை ஆழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் எவ்வாறு பயன்படுத்தியுள்ளார் என்பதையும், தத்துவத்தின் ஐந்து நிலைகளைப் பற்றியும் இவ்வியல் விளக்குகிறது.

**இ. அவதாரம்**

திருமால் எடுத்த அவதாரங்கள் என்னென்ன, அவதாரங்களைப் பற்றி எந்தெந்தப் புராணங்கள் கூறுகின்றன. திருநெடுந்தாண்டகம் என்னென்ன அவதாரங்களைப் பற்றிக் கூறுகிறது என்பதையும், எத்தனைப் பாசுரங்களில் எந்தெந்த அவதாரங்களைப் பற்றிச் சிறப்பாகப் பேசுகிறது என்பதைப் பற்றி இவ்வியல் கூறுகிறது.

**4. உரைநயம்**

உரைநயந்த பெருமகனார் "பெரியவாச்சான்பிள்ளை" திருநெடுந்தாண்டகத்திற்கு எழுதிய உரையும் சிறப்பு மிக்கதாகப் போற்றப்பெறுவதற்கான காரணத்தைச் சுட்டுகிறது. பாசுரங்களின் ஒவ்வொரு சொல்லையும் எடுத்து அவர் பல விளக்கங்களைக் கூறும் பாங்கு "மைவண்ண" என்ற ஒரே ஒரு பாசுரத்தின்மூலம் இவ்வியலில் விளக்கப்படுகிறது.

**முடிவுரை**

இவ்வாய்வின் இறுதியில் ஆய்வுமுடிவுகள் தொகுக்கப் பெற்றுக் கூறப்படுகின்றன.இவ்வாய்வுக்குத் துணைசெய்யும் சில பட்டியல்களும் பிறவும் பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளன. இறுதியில் துணைநூற்பட்டியல் தரப்பெற்றுள்ளது.



## திருமங்கையாழ்வாரின் வரலாறு

இடைக்காலம், பக்தி இலக்கியங்கள் தோன்றிய காலம்; பல்வேறு சமயங்களும் நாட்டில் தோன்றின. போரும் பூசலும் ஏற்பட்ட காலத்தில் பலர் இறைவன் என்னும் பேரின்பப் பொருளைப் பற்றி மக்களிடையே பேசினர்; இலக்கியங்கள் படைத்தனர். சைவ சமய வளர்ச்சியின் பொருட்டு நாயன்மார்கள் தோன்றினாற்போல் வைணவ சமயத்தின் பொருட்டு ஆழ்வார்கள் தோன்றிப் பாடுபட்டனர்.

தமிழ்மண்ணில் திருமால் நெறியினை வளர்த்த பெருமை ஆழ்வார்களையும், ஆச்சாரியர்களையும் சாரும். "மாயோன் மேய காடுறை உலகமும்"[1] என்று தொல்காப்பியம் கூறுவதால் காடும் காடு சார்ந்த இடமுமாகிய முல்லை நிலத்தின் தெய்வமாகிய திருமால், கண்ணனாய், பரம்பொருளாக, முதற்பொருளாகப் பலராலும் போற்றி

வணங்கப்படுபவன். அவன் பெருமைகளைப் பாடி ஆழ்வார்கள் வைணவத்தைப் பரப்பினர்.

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற பன்னிரு ஆழ்வார்களால் பாடப்பெற்ற 24 பிரபந்தங்களின் தொகுப்பே நாலாயிரத் திவ்யப் பிரபந்தம். இப்பிரபந்தம் வைணவப் பெருமக்களால் போற்றப்பெறும் பக்திநூல்.

வைணவ சமயம், பாரதநாடு முழுவதும் பரவி நிற்கும் மிகப்பழைய சமயம். வடக்கில் பத்ரிநாத்திலிருந்து, தெற்கே திருப்புல்லாணிவரை பல்வேறு வடிவங்களிலும் பெயர்களிலும் திருமால் வழிபடப் படுகின்றான். திருமாலாகிய விஷ்ணுவே பரம்பொருள் என்றும் பழந்தமிழ் திருமாலின் பெருமைகளைப் பரிபாடல்,

**"தீயினுள் தெறல் நீ பூவினுள் நாற்றம் நீ**
**கல்லினுள் மணியும் நீ சொல்லினுள் வாய்மை நீ**
**அறத்தினுள் அன்பு நீ மறத்தினுமைந்து நீ**
**வேதத்து மறை நீ பூதத்து முதலும் நீ"**

என்று போற்றுகின்றது. பிள்ளை உலகாசிரியர், வேதாந்த தேசிகர் போன்ற வைணவ ஆசார்யர்களுடைய உபதேச நூல்களில், 'எட்டெழுத்து மந்திரத்திற்கு உரியவன்' என்று திருமால் அழைக்கப் பெறுகின்றான். இறைவனின் அருளைப் பெறுதவற்குச் சிறந்தவழி சரணாகதியே என்பதை இராமானுசர் முதலியோர் கூறியுள்ளார்கள். கோதைப்பிராட்டியும்,

**"எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உந்தன்னோடு**
**உற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்"[3]**

என்று திருப்பாவையில் பாடுகிறாள். வைணவத்தைப் பரப்பும் பொருட்டு ஆழ்வார்கள் தமிழ்நாட்டிலும், இன்றைய கேரளத்திலும் தோன்றி வேதத்தைத் தமிழ்மொழியில் தந்தனர் என்று ஆசார்யர்கள் போற்றுகின்றனர்.

## திருமங்கையாழ்வாரின் தோற்றம்

இவ்வாழ்வாரைப் பற்றிய வரலாற்றை ஆறாயிரப்படி குருபரம்பரை,

மூவாயிரப்படி குருபரம்பரை, பன்னீராயிரப்படி குருபரம்பரை (மணிப்ரவாளம்) என்ற வடமொழி நூல்களும் தெரிவிக்கின்றன. அவற்றின்படியே கீழ்க்காணும் செய்திகள் தரப்படுகின்றன.

சோழ மண்டலத்தே திருஆலி நாட்டில் திருக்குறையலூரில் நளவருடம் கார்த்திகை மாதம் கள்வர் மரபில் தோன்றித் தக்க பருவத்தில் அனைத்துப் போர்ப்பயிற்சிகளையும் கற்றுத் தேர்ந்தார். இயற்பெயர் நீலன். தம் தந்தை இறந்தபின் தந்தையின் பதவியைத் தாமே ஏற்றுச் சோழ மண்டலத்திற்குத் தலைவரானார். கலியன் என்ற பெயர்கொண்ட இவருக்குக் "கருங்களிறு வல்லான்", "மங்கையர் தலைவன்", "கூரணிந்த வேல்வலவனாலிநாடன்", "பரகாலன்" என்ற பல பெயர்கள் உண்டு. 'ஸ்ரீமத் நாராயணனே நமது தெய்வம்; அவனது திருவடியே நமக்கு உரித்தான செல்வம்; அவர் எழுந்தருளி இருக்கின்ற இடமே நம்மிடம்' என்று இறைவனை இவர் நினைக்கையில், இறைவன் ஆழ்வாரை ஆட்கொள்ளக் கருதி மாயம் செய்தான்.

**குமுத வல்லியார் தோன்றல்**

திருநாங்கூரில் உள்ள வைணவ அடியார் ஒருவர் திருஆலியில் இருக்கின்ற தாமரைத்தடாகத்தில் நீராடிவிட்டுக் கரையில் தியானம் செய்துகொண்டிருந்தார். வானத்தில் இருந்து ஒரு தெய்வ விமானத்தில் சில பெண்கள் இறங்கி அத்தடாகத்தில் நீராடி ஆலிநாதரை வழிபட்டுச் செல்கையில் குமுதவல்லியை விட்டு விட்டனர். குமுதவல்லி, வந்தவர்களையும், விமானத்தையும் விட்டு விட்டுக் கரையில் கலங்கி நிற்பதைக் கண்ட வைணவ அடியார் இவளிடம் நடந்ததை அறிந்து கொண்டு இவளைத் தம் வளர்ப்பு மகளாக்கிக் கொண்டார்.

**ஆழ்வார் திருமணம்**

குமுதவல்லி, பெண்ணிற்கே உரிய குணத்தோடு விளங்கித் திருமணப் பருவத்தை அடைந்தாள். இவளைப் பெண்கேட்டுப் பல அரசர்கள் வந்தார்கள். அவர்களுள் ஆழ்வாரும் ஒருவர். இவள் ஸ்ரீ வைணவரிடத்தில் பற்றுடையவள். நாராயணனை வழிபடுவோரை

மட்டுமே தான் மணப்பதாகக் கூறினாள். ஆழ்வார் திருநறையூர் நம்பிகளுடன் சென்று திருஇலச்சினை எல்லாம் பெற்று மீண்டும் பெண்கேட்கக் குமுதவல்லியார் மகிழ்ந்து திருமணம் செய்து கொண்டார்.

பின்னர், 'நாளும் 1008 அடியார்களுக்கு ஓராண்டுக்காலம் அமுது படைக்க வேண்டும்' என்ற இன்னொரு கட்டளையும் இட்டாள். அதற்கும் இவர் ஒப்புக்கொண்டு அம்மையாரோடு பாகவதர்களாகிய திருமாலடியார்களை ஆதரிப்பதில் அரசுக்குரிய செல்வங்களைச் செலவழித்தார். செல்வங்களை இழந்த ஆழ்வாரின் நிலையைச் சோழ அரசன் அறிந்து கொண்டு திறைப் பணத்தை வாங்கிவர ஆட்களை அனுப்பினான். ஆழ்வார் வந்தவர்களிடம் கோபித்துக் கொள்ளச் சோழ மன்னன் ஆழ்வாரோடு சமாதானம் செய்வது போல் வந்து அவரைச் சிறைப்பிடித்தான்.

சிறையில் இருக்கும்போது ஆழ்வார் திருநறையூர்ப் பெருமாள் மனமுருகி வேண்டினார். பெருமான் ஆழ்வார் கனவில் தோன்றிக் "காஞ்சிபுரத்திற்கு வந்தால் உமக்கு வேண்டிய பொருளை யாம் தருவோம்" என்று கூறினார். ஆழ்வார் அரசனிடம் தம்மைக் காஞ்சிக்கு அழைத்துச் சென்றால் அங்குத் திறையப் பணத்தைத் தருவதாகக் கூறினார். அரசனும் அவரைச் சிறையிலிருந்து விடுதலை செய்யக் காஞ்சிப் பேரருளாளனை வணங்கியபின் வேகவதி நதிக்கரைக்குச் சென்று புதையலை எடுத்துக் கட்டவேண்டிய திறைப்பணத்தைச் செலுத்தினார்; மீதமுள்ள செல்வத்திற்கு அன்னதானம் வழங்கினார்.

## வழிப்பறிக் கொள்ளை

அன்னதானப் பணியைத் தொடர்ந்து நடத்துவதற்குத் தேவையான பொருள் இல்லை; கடன்கொடுத்து உதவுபவரும் இல்லை. வழிபறித்தாவது இந்தச் செயலை நடத்த வேண்டும் என்று ஆழ்வார், வில், வாள், அம்பு முதலிய ஆயுதங்களோடு நண்பர்கள் புடைசூழ வழிப்பறிக்கொள்ளை செய்தார்.

**இறைவன் ஆட்கொள்ளல்**

ஆழ்வார், தம்மூரையடுத்த திருமணங்கொல்லையில் வழிப்பறிக் கொள்ளை நடத்திக்கொண்டிருந்தார். அப்போது இறைவன் இவரிடத்தில் ஒரு லீலை புரிய எண்ணினார். பிராட்டியுடன் மணக்கோலத்தோடும், பல செல்வங்களோடும், பரிவாரங்களுடனும், அவ்வழியே வந்தபோது அவர்களைக் கண்டு ஆழ்வார் எல்லாப் பொருட்களையும் பறித்தார். பறித்ததோடு மட்டுமின்றி மூட்டையாகக் கட்டி வைக்க, வைத்த பொருளை எடுக்க ஆழ்வார் முற்படுகையில் அம்மூட்டையை எடுக்க முடியாமல் போனது. அதனால், இறைவனைப் பார்த்து, 'மந்திர வேலை பண்ணினை போலும்!' என்று வாதம் செய்ய, இறைவன் அவரை அருகில் வரச்செய்து எட்டெழுத்து மந்திரத்தை உபதேசிக்க, ஆழ்வார் உளம் மகிழ்ந்து, கண்ணீர் பெருகப் பெருமாளைப் பலபடியாகப் பாடினார்.

**பாசுரங்களின் அமைப்பு**

திருமங்கையாழ்வார் அருளிய பிரபந்தங்கள் ஆறும், நம்மாழ்வார் பாடிய நான்கு பிரபந்தங்களை திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டவை என்று திவ்வியப்பிரபந்த உரையாசிரியர்கள் கருதுகின்றனர். இக்கருத்தைப் பின்வரும் சான்றுகளே வலியுறுத்துகின்றன.

"பன்னிய நூல் தமிழ் மாலை"[4]
"கலியன் வாயொலி செய்த பனுவல்"[5]

திருமங்கையாழ்வாரின் பாசுரங்கள் பனுவல்கள் என்று அழைக்கப் படுகின்றன. இவருடைய ஆறு பிரபந்தங்களான பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் ஆகும். ஆசுகவியாகிய பெரிய திருமொழியும், மதுரகவியாகிய இரண்டு திருத்தாண்டகங்களும் இசைப்பாவாகும். சித்திரப்பா ஆகிய திருவெழுகூற்றிருக்கையும், விஸ்தாரகவிவகைத் திருமடல்கள் இரண்டும் இயற்பாக்களாகும். "திருநெடுந்தாண்டகத்தை நெஞ்சை அள்ளும் நெடுந்தாண்டகம்"

என்றே கூறலாம் என்பார் எசு. குலசேகரன் அவர்கள்.[6] எனவே இவ்வாறு பிரபந்தத்தையும் நான்கு வகையில் அமைத்துப் பாடுவதால் இவருக்கு, **நாலுகவிப் பெருமாள்** என்ற பெயரும் உண்டு.

இவர் பாடிய பிரபந்தங்களில் திருநெடுந்தாண்டகம் என்ற பிரபந்தம் மட்டும் ஆய்வுக்கு உட்படுத்தப்படுவதால் தாண்டகத்தின் அமைப்புமுறை மட்டும் இங்குச் சுட்டப்படுகிறது.

## தாண்டகத்தின் அமைப்பு

தாண்டகம் என்ற சொல் 26 எழுத்தின் மிக்க அடியால் வரும். இது இருபகுப்பினை உடையது. அவையாவன, 1. அளவழித்தாண்டகம் 2. அளவியற்றாண்டகம்.

அளவியற்றாண்டகம், 1. குறுந்தாண்டகம், 2. நெடுந்தாண்டகம் என்ற இரு வகையினை உடையது. பக்தி இலக்கியக் காலத்தில் இப் பா அமைப்புக்குத் தனி இலக்கியச் செல்வாக்குக் கிடைத்தது. அவ்வகையில்தான் சைவசமயத்தில் திருநாவுக்கரசரின் திருநெடுந் தாண்டகமும், வைணவ இலக்கியத்தில் திருமங்கையாழ்வாரின் திருக்குறுந்தாண்டகமும், திருநெடுந்தாண்டகமும் இதற்குச் சான்றாகத் திகழ்கின்றன.

"தாண்டக யாப்பைப் பயன்படுத்தி நாவுக்கரசர் பாடியமையால் இவர்க்குத் தாண்டக வேந்தர் என்ற சிறப்புப் பெயரும் உண்டு"[7]

தாண்டகத்தைப் பற்றிய யாப்புப் பற்றி பன்னிரு பாட்டியல் என்னும் நூல்,

> "மூவிரண்டேனும் இருநான் கேனும்
> சீர்வகை நாடிச் செய்யுளின் ஆடவர்
> கடவுளர் புகழ்வன தாண்டகம் அவற்றுள்
> அறுசீர் குறியது, நெடியது எண்சீராம்"[8]

என்று விளக்கம் தருகிறது.

மேற்சொன்னபடி ஆராய்கையில், தாண்டகம் என்னும் ஒரு பா வகை, தனிச்சிறப்புப் பெற்றுள்ளமையால் ஆழ்வார் இவ்அமைப்பினை

வைத்துப் பாடியுள்ளார். இவை இக்கால அறுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்கள் போல்பவை எனலாம்.

திருமங்கையாழ்வார் இயற்றிய பிரபந்தங்களில் சிகரமாகத் திகழ்வது திருநெடுந்தாண்டகமாகும். இதையே தேவகானத்தில் இசைத்துத் திருவரங்கனைத் தம்வசமாக்கிக் கொண்டார். இவருடைய தாண்டகப் பாசுரங்களில், திருக்குறுந்தாண்டகத்தில் இறைபக்தியும், திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் சாயலும் காணப்படுகின்றன. ஆழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் 30 பாசுரங்களில், தாமான தன்மையில் பத்துப் பாசுரங்களையும், தாய், தலைவி நிலையில் நின்று நாயக நாயகி பாவங்களில் பத்துப் பத்துப் பாசுரங்களையும் பாடியுள்ளார்.

எனவே, இரண்டு காய்ச்சீர், இரண்டு மாச்சீர் ஆக நாற்சீர்களை அரையடியாகக் கொண்டதுமான நான்கு அடிகளால் ஆகிய எண்சீர் விருத்தங்களை அக்காலத்தில் நெடுந்தாண்டகம் என்ற பெயரால் குறிப்பிட்டனர் என்பதும் தாண்டகம் என்பது வடமொழித் தாண்டகம் என்பதனோடு ஏதும் தொடர்பற்றது என்பதுவேயாகும்.

## *குறிப்புகள்*

1) தொல் (அகத்திணை) நூ.எ. 5

2) பரி (3 திருமால்) பா.எ. 63 – 66

3) திருப்பாவை பாசு. எண். 29

4) தி.நெ.தா. பாசு. எண். 30

5) பெ.தி.மொ. (1ப 4தி 10பா)

6) எஸ். குலசேகரன், ஆழ்வார்களின் காலநிலை, ப. 225

7) ந.வீ. செயராமன், பாட்டியலும் இலக்கிய வகையும், ப. 376

8) யாப்புப் பாட்டியல் – நூ. எ. 112.

# திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள்

பண்டைக்காலத்தில் இலக்கியங்களை அகம், புறம் என இருவகையாகப் பிரித்தனர் சான்றோர். பிறர் புலன்களால் அறியக் கூடியதைப் புறப்பொருள் என்றும், ஏனையோர் கண்களுக்குப் புலப்படாமல் அனுபவிப்பவர் மட்டுமே அறியக் கூடியது அகப்பொருள் என்றும் பிரித்துள்ளனர். பொருள் வாழ்க்கைக்குத் தேவையான ஒன்று. எனவே பொருள் என்பதைப் பொதுவாக வைத்து அகத்தைச் சார்ந்து வரும் பொருள், அகப்பொருள் என்றும், புறத்தைச் சார்ந்துவரும் பொருளெல்லாம், புறப்பொருள் என்றும் வழங்கினர். அகப்பொருள் தலைவன் தலைவியும் இல்லற அன்பு வாழ்க்கை. புறப்பொருள் போர், வீரம், பகை, நட்பு முதலியவற்றின் மேல்வரும். இப்பொருள் இலக்கணம் தமிழில் மட்டுமே உள்ளது. மக்களின் அகப்புற வாழ்க்கையினை விளக்கி நிற்பதால் இவை திணை இலக்கியங்கள் என்றே அழைக்கப்படுகின்றன.

**அகம் விளக்கம்**

மக்கள் அடைய வேண்டுவனவாகிய உறுதிப்பொருள்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாகும். இன்பத்தை அகம் எனவும், ஏனைய மூன்றையும் புறமெனவும் பகுத்துக் கூறுவர் தமிழர். "அகம் தலைவனாலும் தலைவியாலும் எப்போதும் உள்ளத்து உணர்வாலேயே அனுபவிக்கக்கூடியதாய், இன்பம் பற்றி அகத்தே ஒழுகும் ஒழுக்கமாகும்."[1]

மனிதனின் அடிப்படை உணர்ச்சியான அன்பு, காதலாகத் தோன்றிக் கலையுணர்வுடன் மொழி வாயிலாக வெளிவரும்போது அகப்பொருள் விளக்கம் கொள்கிறது. இக்கருத்திற்குப் பின்வரும்

அறிஞர் கருத்து சான்றாக அமைகிறது. "உள்ளத்து உணர்வுகள் பலவாக இருந்தாலும் ஊற்றெடுக்கும் இன்ப உணர்வுகள் பலவாக இருப்பினும் அன்பாகிய காதலுணர்வே முதன்மையுடன் அகம் எனச் சிறப்புக் குறியீடு பெறுகின்றது"[2]. இதனை "மெல் இயல் அரிவை நின் நல் அகம்"[3] எனக் குறுந்தொகைப் பாடலும், "மாதல் உண்கணும் வனப்பின் தோளும் இவை காண்தோறும் அகமலிந்து"[4] என நற்றிணைப்பாடலும் உணர்த்துகின்றன.

**பிற ஆசிரியர் தரும் விளக்கம்**

**அகம்**

"அகப்பொருளாவது போகநுகர்ச்சியாகலான் அதனாலாய பயன்தானே ஆதலின் அகம்"[5] என்றார் இளம்பூரணர்.

"ஒத்த அன்பான் இயைந்த ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்து எனச்சுட்டிக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பம் உறுவதோர் பொருளாகலின் இதனை அகம் என்றார்"[6] நச்சினார்க்கினியர்.

"பிறர்க்கு எடுத்துரைக்க முடியாமல் தானே உணரக் கூடியதை மனத்தில் அனுபவிக்கக் கூடியதை அகம் என்று கூறலாம்"[7] என்கிறார் சரளாராஜகோபாலன். எனவே மேற்சொல்லப்பட்ட கருத்துக்களை நோக்கும்போது அகம் என்பது பிறர்க்கு வெளிப்படாதது; இருவரிடையே மட்டும் தோன்றக்கூடிய அன்பின் வெளிப்பாடே எனக் கொள்ளுதல் பொருத்தமாகும்.

**அகப்பொருளும் அன்பும்**

மக்கள் இனத்திற்கு உறுதிப்பொருள் மூன்றில் அறமே தலையாயது என்று கொண்டு அறத்தால் பொருளீட்டி அப்பொருளால் நல்லின்பம் துய்த்து வாழ்தல் வேண்டும் என்ற கருத்தில் "சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும் அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல"[8]

என்று பண்டைச் சான்றோர் கருதினர். எனவே நேரிய வழியில் ஈட்டும் பொருளே அறம் செய்வதற்கும் இன்பம் உய்ப்பதற்கும் பயன்படும்.

**"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தான் அமர்ந்து வரூஉம் மேவற்றாகும்"[9]**

என்று தொல்காப்பிய நூற்பா கூறுவதால் மக்கள் மட்டுமின்றி உலகில் உள்ள எல்லாஉயிரினங்களுக்கும் இன்பம் என்பது பொதுவானதாகும்; விரும்பப்படுவதுமாகும். ஏனைய அறம் முதலியன மக்களினத்திற்கே சிறப்பானவை. அகம், ஆணும் பெண்ணுமாக இருந்து நுகர்தல் சிறப்புடைத்து. இதைப்பற்றி "இன்பமும் பொருளும் அறமும் என்றாங்கு அன்புடன் புணர்ந்த ஐந்திணை"[10] என இன்பத்துக்கு முதலிடம் கொடுத்துள்ளார் தொல்காப்பியர். இன்பம் பொதுவாக ஐம்பொறி இன்பம், மனவின்பம் என இருவகைப்படும்.

**"கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும்**
**ஒண்தொடி கண்ணே உள"[11]**

எனப் பெண்ணிடத்து நுகரப்படும் ஐம்பொறி இன்பம் எனச் சிறப்பிக்கப்படுகிறது. ஐம்பொறி இன்பம் அழியக்கூடிய உள்ளத் தொடர்பால் ஏற்படும் இன்பமாதலால் இதனைச் சான்றோர் சிற்றின்பம் என்றே கூறினர்.

**"சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல செய்யாரே**
**மற்று இன்பம் வேண்டுபவர்"[12]**

என்கிறார் வள்ளுவர். சிற்றின்பத்திற்கு மறுதலையாக இருப்பது பேரின்பம்; நிலைபேறுடையது. ஆன்மா பரமாத்மாவோடு நுகர்கின்ற எல்லையிட முடியாத இன்பமே பேரின்பமாகும். எனவே, இவ்வின்ப வொழுக்கத்திற்குக் காதலெனப்படும் சிறந்த அன்பே காரணம் என்றே கொள்ளலாம்.

அகப்பொருள்அமைந்த பாடல்களைச் சான்றோர்கள் ஒருவகைக் கோட்பாட்டில் வரையறை செய்து வைத்துள்ளனர். அந்த வரையறைகளை ஒட்டியே சங்ககால அகப்பொருள் பாடல்கள் அமைந்துள்ளன. அகப்பொருள் தலைவன் தலைவி முதலியோருள் எவருடைய இயற்பெயரும் குறிப்பிடாது பாடப்படும்.

தொல்காப்பியத்தில் ஆசிரியர் ஆசிரியம், வெண்பா, கலி, வஞ்சி, மருட்பா, பரிபாடல் என்ற அறுவகைப்பாக்களைக் குறிப்பிடுகிறார். இசைப் பாடல்கள் தொல்காப்பியத்தில் "பண்ணத்தி" என்ற பெயராலேயே வழங்கப்படுகின்றன. இசைப்பாடல்கள் மக்கள் உள்ளத்தைப் பெரிதும் ஈர்த்ததினால் சிலம்பிற்குப் பின் தோன்றிய அருளாளர் தாமும் பொதுமக்கள் மகிழ்வோடு பெற்றுப் பயன்படுத்துவதற்குரிய அத்தகைய இசைப் பாடல்களையே பாடினர்.

மக்களிடத்தில் செல்வாக்குப் பெற்ற அகப்பொருள் தெய்வத்திடம் மக்கள் கொண்டுள்ள ஈடுபாட்டைத் தெரிவிக்கவும் பயன்படுவதாயிற்று. இச்செய்தியைக்

**"காமப் பகுதி கடவுளும் வரையார்**
**ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்"**[13]

என்று தொல்காப்பியர் கூறுகிறார்.

அகத்துறை அமையப் பதிகங்கள் பாடுவதில் திருமங்கை யாழ்வாரும் நம்மாழ்வாரும் சிறந்தவர்கள். இவர்களுக்கு முற்பட்ட பேயாழ்வார் "வெற்பென்று வேங்கடம்பாடும் வியண்துழாய்"[14] என்ற பாசுரத்தையும், முதல் ஆழ்வார்களின் காலத்தவராகிய திருமழிசையாழ்வார் "அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண"[15] என்ற பாசுரத்தையும் பாடியுள்ளார்.

இப்படித் தாளை நயந்த அடியார்கள் தோளை நயக்கும் துணையோடு ஒத்த மனநிலையில் தம்மைக் கற்பனை செய்து கொள்கிறார்கள். தலைவிக்கும் அடியார்களுக்கும் உள்ள செய்தி பின்வருமாறு:

1. தலைவனுக்கே தொண்டு செய்தல்.
2. தலைவனையே பற்றுக்கோடாக எண்ணல்.
3. தலைவனால் கிட்டும் பாதுகாவலையே விரும்பல்.
4. தலைவன் உகப்பிற்குரிய செயலில் ஈடுபடுதல்.
5. தலைவன் புணர்வு நனி வேட்டல்.
6. அவன் பிரிவு கண்டு இரங்கல்.

எனவே இன்பத்திலும் துன்பத்திலும் அடியவருடைய் மனமும் தலைவியினுடைய மனமும் ஒரே நிலையன. இதைக் கம்பர் மனம் கொண்டு,

**"அண்ணல் வீரனைத் தம்பியும் மன்னமும்**
**கண்ணி னீரினிற் பாதங் கழுவினார்"**[16]

எனக் கூறுகிறார்.

இந்த நிலையிலேயே எம்பெருமான் திருத்தாளினை விரும்பும் ஆழ்வார் "ஞானத்திலே தன்பேச்சு பிரேமத்தில் பெண்பேச்சு" என்ற நிலையில் ஒரு பிராட்டி மனநிலை அடைந்து பரகால நாயகராகிய இவர் பரகால நாயகியாகி நேராகத் தம் கூற்றாலும் தலைவி, தாய், செவிலி கூற்றாலும் பல பாடல்களைப் பாடியுள்ளார். இந்நிலை பராங்குச நாயகியாகிய நம்மாழ்வாருக்கும் பொருந்தும்.

**இறைவனை அடையும் வழிகள்**

இறைவனை அடைவதற்கு நான்கு வழிகள் உள்ளன. அவை பயன் கருதாமல் நற்பணிகளில் ஈடுபடுவதாகிய கர்மயோகமும், அறிவினால் இறைவனை நேரில் காண்பதுபோல் அனுபவிப்பதாகிய ஞானயோகமும், பக்தியோகமும், இறைவனை எப்படியாகிலும் அடைந்தே தீர வேண்டும் என்ற பிரபத்தியோகமும் ஆகிய வழிகளாம். மேற்சொல்லப்பட்ட ஞான, கர்ம, பக்தி யோகத்தைப் பின்பற்ற இயலாதவர்கள் இறைவனை அடைய வேண்டும் என்ற பலத்தைத் தருகின்ற பிரபத்தியையே பின்பற்றுவார்கள். பிரபத்தியினால் அவர்கள் விரும்பிய பலன்களை அடைவார்கள். சான்றாக,

**"தரும புத்திராதிகளுக்குப் பலம் இராச்சியம்,**
**திரௌபதிக்குப் பலம் வஸ்திரம், காகத்துக்கும்**
**காளியனுக்கும் பலம் பிராணன். கஜேந்திர**
**ஆழ்வானுக்கு பலம் கைங்கர்யம்,**
**ஸ்ரீவிபீஷணனுக்கு இராமப்பிராப்தி, பெருமாளுக்கு**
**சமுத்திரதரணம், இளைய பெருமாளுக்கு பலம்**

என்பவை போலத் திருமங்கையாழ்வார் திருமேனி வழிபாடாகிய

அர்ச்சாவதாரத்திலே விரும்பி இருப்பர். குணங்கள் நிறைந்த இந்த அர்ச்சாவதாரமே இறைவனை அடைவதற்குச் சிறந்தவழி என்பதை "ஆழ்வார்கள் பல இடங்களில் பிரபக்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே" என்ற சூத்திரத்தால் அறியலாம்.

**இறைவனின் ஐந்து நிலைகள்**

இறைவனுடைய ஐந்து நிலைகளை ஸ்ரீவசன பூஷணம் பின்வருமாறு கூறுகிறது.

**"பூகத ஜலம் போலே அந்தர்யாமித்வம்**
**ஆவரண ஜலம் போலே வியூகம்**
**பாற்கடல் போலே வியூகம்**
**பெருக்காறு போலே விபவம்**
**அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்"**[18]

எனவே மேற்சொல்லப்பட்ட ஐந்து நிலைகளில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிலையை அனுபவித்திருந்தாலும் திருமங்கையாழ்வார் திருமேனி வழிபாடாகிய அர்ச்சாவதாரத்திலே பெரிதும் ஈடுபட்டார்.

**"ஞானத்தில் தன்பேச்சு பிரேமத்தில் பெண்பேச்சு"**[19]

என்ற நிலையிலே பரகாலராகிய திருமங்கையாழ்வார் பரகால நாயகியானார். அந்நிலையில் இவர் தலைவியாகவும், செவிலியாகவும், உளம்கொண்டு பாசுரங்களைப் பாடியுள்ளார். திருநெடுந் தாண்டகத்தில் முதல் பத்துப் பாசுரங்களில் இறைவன் திருவடிகளில் பற்று வைத்துக்கொண்டு அவன் தமக்குக் காட்டிக் கொடுத்த உதவிகளைப் பேசுகின்றார்.

**தாமான தன்மை**

திருமங்கை ஆழ்வார் ஆரம்பகாலத்தில் சிற்றின்பங்களிலே ஊன்றியிருந்தார். இறைவன் இவருக்குத் தன்னழகைக் காட்டித் திருமந்திரத்தை உபதேசிக்க, உபதேசம் பெற்ற ஆழ்வார் "வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்" என்று பாடத் தொடங்கினார். பின்னர் இந்த உலக வாழ்க்கையிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ளுமாறு வேண்டினார். இதற்கு அவருடைய பாடற்பொருள்களே சான்றாக அமைகின்றன.[20]

1. சித், அசித், ஈசுவரன் ஆகிய தத்துவங்களைக் காட்டிக் கொடுக்கக் கண்டு களித்தபடி பேசினார். உலகமும் உலகில் உள்ளவையும், மின்னலைப் போல் நிலையற்றன. உயிர் வாழ்வதற்கு நான்கு வேதங்களை அளித்து இருளாகிய அறிவின்மையைப் போக்கித் தன்னுடைய உருவைக் காட்டியவன். மரணத்திற்குப் பின் மோட்சத்தை அளிப்பவன். ஐம்பெரும் பூதங்களில் உறைபவனாய் இருப்பவன் என்று இறைவனின் குணங்களையும் திருமேனி, பண்பு, செயல்களைப் பாராட்டுகின்றார்.

2. மும்மூர்த்திகளையும் நினைத்துப் பார்க்க அவர்களுள் பிரமனையும், சிவனையும் குறிப்பிட்டு இவர்கள் எம்பெருமானால் படைக்கப்பட்ட ஜீவாத்மாக்கள். இவர்கள் திருமாலுக்கு உடல் என்பது வேதத்தால் ஒத்துக்கொள்ளப்பட்ட உண்மை. அவனே அனைத்துக்கும் பரம்பொருள்.

3. எம்பெருமான் நிறத்தால் முதல் யுகத்தில் வெண்ணிறத் தவனாகவும், இரண்டாம் யுகத்தில் செந்நிறத்தவனாகவும், மூன்றாம் யுகத்தில் பாசி நிறத்தவனாகவும், நான்காம் யுகத்தில் கருநீல வண்ணனாகவும் இருப்பதால் அவனைப் பாசுரமிட்டுப் பேச முடியாது.

4. 'பெருந்தேவர்களுக்கெல்லாம் தலைவன்; திசைநான்கும் திங்களும் ஞாயிறுமானவன்; எட்டெழுத்து மந்திரங்களுக்குரியவன்' என்கிறார்.

5. திருவிக்ரம அவதாரத்தின் சிறப்பைப் புகழ்ந்து பேசுகிறார்.

6. 'ஏனைய திவ்ய தேசங்களிலும், திருக்கோவலூரிலும் எழுந்தருளி இருக்கும் பெருமாளைத் தொழுவோம் வா' என்று மனத்தை அழைக்கிறார்.

7. பரசுராமனாய் அவதரித்ததையும், இராமனாய் ஆட்சி புரிந்ததையும், பெரிய கடலில் ஒப்பற்ற வேலை எய்த முருகன் முதலானோரையும் வெற்றி கொண்டதையும் துர்க்கையாலே காவலிடம் பெற்றதாகிய திருக்கோவலூரையும் பாடுகிறார்.

8. 'திருநீரகம், திருமலை, நிலாத்திங்கள் துண்டம் ஊரகம், திருவெஃகா போன்ற திருத்தலங்களில் இருக்கும் எம்பெருமானின் திருவடிக்கே சரண்' என்கிறார்.

9. 'கடல்மல்லை, கச்சி, திருப்பேர், பாற்கடல் ஆகிய ஊர்களில் வீற்றிருக்கும் இறைவனே எம்பெருமானே உன்னை நான் தேடிக் கொண்டு அலைகின்றேனே' என்று வருந்துகிறார்.

10. திருமால் உறையும் திருத்தலங்களைத் தம் மனக் கண்ணால் கண்டு ஆழங்கால் பட்டு அன்பு மிகுதியாகத் தலைவி நிலையை அடைகிறார்.

## திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள்

பண்டைத் தமிழ் மக்களின் வாழ்க்கை முறையினைப் பற்றிய அகப்புறக் கோட்பாடுகளைத் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் விரிவாகப் பேசுகின்றார். திருமணத்திற்கு முன் தலைவன் தலைவியைச் சந்தித்து நிகழ்த்தும் இயற்கைப் புணர்ச்சி போன்றவை எல்லாம் தோன்றும் வாழ்க்கை களவு என்றும், திருமணத்திற்குப் பின், நிகழும் வாழ்க்கையைக் கற்பு வாழ்க்கை என்றும் கூறுவர். இத்தகைய களவு முறைகளையே திருநெடுந்தாண்டகம் கூறுகிறது. திருமங்கையாழ்வார் பாடிய திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் எவ்வாறு அமைந்துள்ளது, என்பதையும் இத்தகைய அமைப்பு முறையைப் பெரியதிருமொழியில் எவ்வாறு படைத்துள்ளார் என்பதையும் இவ்வியல் ஆராய்கிறது. இவ்வியல் இரண்டு பிரிவாகப் பிரித்துக் கொள்ளப்படுகிறது.

1. திருமங்கையாழ்வாரின் திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள். அ) தாய் ஆ) தலைவி

2. பெரிய திருமொழியும் திருநெடுந்தாண்டகமும்.

திருமங்கையாழ்வார் பாடிய திருநெடுந்தாண்டகத்தில் தாய், தலைவி என்பார் கூற்றுக்கள் மட்டுமே உள்ளன. தோழிகூற்று என்பது இல்லை. இவர் தாய் கூற்றாகப் பத்துப் பாசுரங்களைப் பாடியுள்ளார்.

கூற்றுக்கள் நிகழும் இடத்தை ஆசார்யஹ்ருதயம் பின்வருமாறு கூறுகிறது.

**"சம்பந்த உபாய பலன்களில் உணர்த்தி**
**துணிவு பதற்றம் ஆகிய பிரஞ்ஞாவஸ்தைகளுக்குத்**
**தோழி, தாயார், மகள் என்று பேர்"[21]**

தாய் கூற்று நிகழும் இடங்கள் தொல்காப்பியக் களவியல் பகுதிகளில் பதின்மூன்று இடங்களில் கூறப்படுகின்றன. அவற்றுள் ஒன்பது இடங்கள் மட்டுமே கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. களவு அலராயினும்
2. காம மேற்படுப்பினும்
3. அளவு மிகத்தோன்றினும்
4. தலைவனோடு தலைவியைச் சேர்த்துப் பார்த்தக் கண்ணும்
5. கட்டினும்
6. கழங்கினும்
7. வெறியாடுவாமென்றவழி தலைவியின் நிலையைத் தோழியிடத்தில் வினவியக் கண்ணும்
8. அவ்வாறு கூறியவழி காரணம் அறிதற்கண்ணும்
9. கனவின் அரற்றல் கண்ணும்"[22]

கூற்று நிகழும்.

"களவலராயினும்" முதல் "கனவிரைற்றல்" ஈறாகச் சொல்லப்பட்ட ஒன்பது கூற்றும் தாய் தலைவியின் நிலையை அறிந்து தோழியிடம் வினவக்கூடிய இடங்களாகும். இவ்வொன்பதில் எந்தெந்தக் கூற்றுக்கள் திருநெடுந்தாண்டகத்தில் பொருந்தியுள்ளன என்பதைப் பாசுரங்களைக் கொண்டு காணலாம்.

பெருமானைக் காணவேண்டும் என்ற ஆற்றாமை கொண்ட ஆழ்வார் தலைவி நிலையை அடைந்தார். இந்நிலையில் வாய் திறந்து பேசமுடியாத நிலை ஏற்பட்டு, காம மேற்பட்டு துன்பநிலை அடைகிறார்.

**"தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்**
**எண்ணுங்காலைக் கிழத்திக் கில்லை"[23]**

என்பதால் தலைவி தன் வேட்கையைக் கிழவன் முன் சொல்லாது

பசுமட்கலத்தின்கண் பெய்தநீர் போலப் புறம் பொசிந்து காட்ட, அவள் உடலில் சில மாற்றங்கள் தோன்றுகின்றன.

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் சொல்லப்பட்ட நிகழ்வு களான இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப்புலம்பல், எதிர் பெய்து பரிதல், பசலைப் பாய்தல், கனவிரைற்றல் போன்ற மாறுபாடுகள் தலைவியினிடத்து நிகழ்வதால் தலைவியின் ஒவ்வொரு நிலையையும் தாய் தன் பாசுரங்களில் வைத்து இரங்கும் துறையிலேயே தலைவியின் ஆற்றாமையைக் கண்டு இத்தகைய நிலை ஏற்படுவதற்கு என்ன காரணம்? என அறிய முற்பட்டுக் கட்டுவிச்சியை அழைத்துக் காரணம் அறிய முற்படுகின்றான்.

கட்டுவிச்சியை அழைத்துத் தலைவியின் மெய்யின்கண் தோன்றுகின்ற மாற்றத்தைக் கூறிக் காரணம் அறிகிறாள்.

### கட்டுவிச்சி குறி சொல்லுதல்

இயற்கைப்புணர்ச்சியில்எம்பெருமானாகியதலைவனைக்கூடிப்பின் பிரிவாற்றாதவளாகிய தலைவியின் மெய் வேறுபாடுகளை அறிந்து இவளை நலம்பெறச் செய்வதில் அக்கறை கொண்ட தாய் கட்டுவிச்சியை அழைக்கிறாள். கட்டுவிச்சி எம்பெருமானிடம் பெரிதும் ஈடுபாடுடையவளாதலின், 'இவளுக்கு வந்த நோயின் உண்மைக் காரணத்தை அறிந்து இறைவனால் வந்த நோய் அவனாலேயே நீங்க வேண்டியதாகும்' என்று கூற, கட்டுவிச்சி கூறிய வார்த்தைகளையும், பெண்ணின் நிலையையும் வந்தவர்களுக்கு இப் பாசுரத்தால் அருளிச் செய்கிறாள்.

தம் சொற்களால் கூறுவதுபோலத் திருத்தாயார் பாசுரத்தால் இவருடைய காதல் மிகுதியை எடுத்துக்கூறுகிறார்.

தன் பெண் மயக்கமுற்றிருக்கக்கண்டு பெண்ணைக் காட்டிலும் தாய் வருந்துபவளாக இருப்பதே இயற்கையில் நிகழக் கூடியதாகும்.

இறைவன்மீது மையல் கொண்டு இறைவனைப் பெற வேண்டும் என்ற நிலையை அடைந்தாள் தலைவி. இயற்கைப்

புணர்ச்சியாகையினாலே வெளியார்க்குச் சொல்ல முடியாமல் தாய் பெண் நிலையைக் குறித்து உள்ளத்தில் உவக்கிறாள். தலைவியின் நிலையைப் பின்வருமாறு கூறுகிறாள்:

எம்பெருமான் கலவி நேரத்தில் ஒவ்வொரு உறுப்பழகைக் காட்டிலும் பொது அழகைக் காட்டிலும், உடை உடுத்த அழகிலே ஈடுபட்டு இந்த உடை உடுத்த அழகு மேம்பட்டது என்று அதன்கண் ஈடுபட்டமை கண்டு, அவன் வருகைக்கு ஏற்ப ஆயத்தங்களைச் செய்கிறாள்.

அவள் உடை உடுக்கும்போது இவ்உடையின் அழகைக் காணும் வாய்ப்பினைத் தலைவன் இழக்கக்கூடாது என்றும், அவன் விரும்பிய உடையை அவன் வரும் வரையில் உடுத்தி அலங்கரித்துக் கொண்டு, அவன் வரவில்லை எனவே வருத்தமுற்று உடை உடுத்துதல் தன்னலச் செயலாய் முடிந்து விட்டதே என்று வருந்தி அதுதன் ஆன்மாவின் இயல்புக்குத் தீங்கு ஆதலின் ஆன்ம இயல்புக்கு இழுக்குப் பிறந்ததால் வந்த மயக்கமாயிற்று. முதலில் ஏற்பட்ட இவளது இரக்கநிலை, எம்பெருமானைத் தழுவவேண்டும் என்ற நிலையாலே ஏற்பட்ட மன அலைவு. இந்த மன அலைவைவிட மயக்கமே நன்று என்று சொல்லும்படி இருந்தாள்.

அவள் நிலைகண்டு அமைதியுறச் செய்வதற்கு அவள் விரும்பி விளையாடும் பாவையைக் கொண்டு வந்து காட்ட அது "திருட்டி விடம்" என்ற பாம்புபோல நச்சுடையதாயிற்று. ஆகவே, 'இவளுக்கு இந்நிலையை உண்டாக்கியவன் யார்? இவளை மயக்கியவர் யார்? உண்மையை உள்ளவாறு உரைப்பாயாக' என்று கட்டுவிச்சியை வினவி உண்மையை அறிந்து "கடல்வண்ணா இது செய்தால் காப்பாராரோ"[24] என்று கூறி, 'அரங்கநாதனால் ஏற்பட்டது. எம்பெருமான் அழகிலே இப்பெண் ஆட்பட்டாளாதலின் இது தெய்வ நன்நோய்' என்கிறாள்.

மேற்சொன்ன கருத்துக்கள் யாவை? தலைவியின் காதல் நோயை அறியாது, அவளின் மெய்மாற்றத்தைக் கண்டு இந்நோய்

வருவதற்கான காரணத்தை அறிய முற்பட்டு கட்டுவிச்சியை அழைத்துக் கேட்கிறாள் தாய். எனவே, தொல்காப்பியம் கூறும் தாய் கூற்றில் "கட்டினும்" என்ற கூற்றுப் பொருத்தமாக அமைந்துள்ளது.

கட்டுவிச்சியின் மூலம் தலைவியின் நிலையை அறிந்த தாய் "நெஞ்சுருகி கண் பனிப்ப" முதல் "தோராளும் வாளரக்கன்" ஈறாகச் சொல்லப்பட்ட பாசுரங்களில் தலைவியின் ஒவ்வொரு மாற்றத்தையும் அறிந்து, அவள் நிலைக்கு வருந்தி இரங்குதுறையிலே தன் கருத்துக்களைக் கூறுகிறாள்.

**தலைவியின் நிலையைக் கண்டு தாய் இரங்குதல்**

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் கூறப்பட்ட இன்பத்தை வெறுத்தல், துன்பத்தைப் புலம்பல், உறுபெயர் கேட்டல், ஒப்புவழி, உவத்தல், எதிர்பெய்து பரிதல், கண்துயில் மறுத்தல் ஆகிய வேறுபாடுகள் தலைவியினிடத்தில் காணப்படுவதாகக் கூறுகிறார். அத்தகைய நிலையைத் தாய் ஒவ்வொரு பாசுரத்திலும் தன் பெண்ணின் நிலையைக் கண்டு ஆற்றாமையால் வருந்திப் பின்வரும் கருத்துக்களைக் கூறுகிறாள்.

**கண்துயில் மறுத்தல்**

கட்டுவிச்சி கூறியதையும், அதனைக் கேட்டுத் தாய் அயலாரிடம் எடுத்துக்கூறுவதையும் அறிந்த தலைவி பழைய நிலைக்குவர, அப்பொழுதும் தன் தலைவன் முகங்காட்டாமையால் இவளுடைய ஆற்றாமைக்கு வருந்தி இவள் எம்பெருமானைக் கூப்பிட்ட திறத்தை வினவ வந்தாரிடம் சொல்லி வருந்துகிறாள்.

தலைவனின்பால் வேட்கை அதிகமானதால் இவளது துயரம் தன்னியல்புக்கு ஏற்பட்ட அழிவு ஆகும். 'தனக்குத் தன் பெண் அடங்காமல் போய்விட்ட நிலையைக் கண்டு, எல்லாவற்றிற்கும் காரணம் என்பாவம்' என்று அயலாரிடம் கூறுகிறாள்.

உள்ளுறுப்பாகிய மனம் உருக, வெளியுறுப்பாகிய கண்ணால் நீர்விட, இன்னசெய்வதென்று பகுத்தறிய மாட்டாதவளாய் அசைவற்று,

நெஞ்சுருகி, ஆவியாகமாறி அது பெருமூச்சாக வெளிவருகிறது. உலகியல் பொருட்களின்மீது "வெறுப்பு" ஏற்படுவதால் அவளின் உறக்கம் போயிற்று. ஆனந்தக் கண்ணீர் வடிக்கவேண்டிய இவள் கண்கள் "காமமேற்படுத்த" காரணத்தால் சோகக் கண்ணீராயின. இவளுடைய கண்களோ விண்ணுலகு, மண்ணுலகு என்ற செல்வங்களுக்கு உரிய தலைவனையும் அடக்கும் ஆற்றலுடையன. அத்தகைய கண்களைப் பெற்ற இவள் "பள்ளி கொள்வதில்லை" என்கிறாள்.

இங்கு "பள்ளி கொள்ளாள்" என்று கூறுவதற்கான காரணம் வயிற்றுப் பிறந்த பெண்ணாக இருப்பினும் அரசன் தேவியாகப் பட்டம் கட்டிவிட்டால் ஆழ்வார் என்றே சொல்லுவார். அதனால் எம்பெருமானிடம் இவளுக்குத் தொடர்பு உண்டாவதால் அவளிடம் தாம் கொண்ட மதிப்புத் தோன்ற வணக்கத்திற்குரிய சொல்லால் "பள்ளி கொள்ளாள்" என்று கூறுகின்றாள்.

எப்பொழுதும் தன்மடியில் படுத்துறங்கும் இப்பெண் இப்பொழுது படுப்பதற்கு மனம் பொருந்தாவண்ணம் தலைவன் இவளைத் தீயவழியில் படரவிட்டான். எனவே தன் விருப்பிற்குரிய பொருளை எல்லாம் வெறுத்துத் தனக்கே உரிய எம்பெருமான் திருவரங்கம் எங்கே? என்கிறாள். இவளுக்கு ஏற்பட்ட இந்நிலை அவனுக்கு ஏற்பட்டிருந்தால் அப்போது உணர்ந்திருப்பான் எனக்கு அடங்கி நடக்கும் என் பெண்,

**"அச்சமும் நாணமும் மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற்குரிய என்ப"[25]**

என்று பெண்களுக்கு உரிய இயல்புகளைக் கைவிட்டுத் தலைவனுடைய ஊரை வாய்விட்டுக் கூறுகிறாள். தன் மனத்தில் எவ்வளவு ஆற்றாமை இருந்தாலும் அதனை மறைத்துக் கொண்டு எதிராக நிற்கும் தலைவனை வருத்துவது பெண்மையின் இலக்கணம் ஆகாது.

**"உண்டிற் குறைதல் உடம்பு நனிசுருங்கல்**
**கண் துயில் மறுத்தல்"[26]**

என்ற நிலையில் தலைவி, "காம மேற்படுத்த கண்ணும்", "அளவு மிகத் தோன்றி கண்ணும்" இருக்க, அத்தகைய நிலையில், 'எம்பெருமான் திருவரங்கம் எங்கே?' என்று கூறியவள் 'அடியாருள் மேம்பட்டவனாக விளங்கும் ஆதிசேடன் இறைவனுக்கு விருப்பமுடையவனாக இருப்பது போல இறைவனும் அடியார்களுக்கு விருப்பமுடையவனாக இருப்பதே அவனுடைய அடிமைத்தன்மையின் மேல் எல்லை. அத்தகைய ஆதிசேடன் நஞ்சை உமிழும்படியாக இருக்கிறானே' என்கிறாள்.

'நான் என் தாய் மடியை வெறுக்க இவனுக்குப் படுக்கை இனிமையாக உள்ளதே. நான் இருக்கும் இடம் பூவும் மணமும் இன்றி வறண்டு கிடக்க, அவன் இருக்குமிடம் தளிரும் பூவுமாக உள்ளதே' என்றும், 'உலகியல் பொருளில் ஈடுபட்ட எனக்குத் தன்னினிமையைக் காட்டி, வெளிப்பொருளில் பற்றினை அழித்து நான் உயிர்வாழ முடியாதபடி செய்துவிட்டானே' என்றெல்லாம் கூறி வருந்துகிறாள்.

'நான் இவள் ஆற்றாமைக்கு ஆறுதல் கூறுபவளானேன்' என்று எண்ணித் தோழியை முன் நிறுத்த தலைவி, "நாம் கோவிலிலே போய் பெரிய பெருமாளைத் தரிசிக்கலாம். திருவரங்கம் புகுந்தால் ஒரு மடுவில் புகுந்ததைப் போலக் களைப்பு நீங்கும்" என்கிறாள்.

"ஆன்மாவின் பண்பிற்கு இழுக்க வரும் வகையில் உன் பெண் நடந்து கொள்கிறாளே! நீ அவளை நல்வழிப்படுத்தக் கூடாதா?' என்று அயலால் வினவும்படி என்னைச் செய்துவிட்டாளே, எனக்கு அடங்கி நடக்கும் நிலைமையைக் கடந்து, பண்பினை மறந்து, என் விருப்பத்தையும் செய்யாது இருப்பது இவள் குற்றமன்று. எல்லாம் நான் செய்த பாவமே!" என்று வருந்துகிறாள் தாய்.

**துன்பத்துப்புலம்பல்**

**தலைவி தலைவன் திருநாமம் சொல்ல கிளியை வேண்டல்**

தலைவி தலைவனின் பெயரைத் தன்வாயாலே கூறும் பொருட்டு அவளைத் தேற்றுவிக்க எண்ணிய தாய் இவள் வளர்த்த கிளியை இவள் முன் நிறுத்தி எம்பெருமானின் பெயரைச்

சொல்லுவித்தால் இவளது ஆற்றாமை நீங்கும் எனக் கருதிக் கிளியை இவள்முன் கொண்டு நிறுத்தினாள். திருநாமம் ஒருநிலையில் தூய்மையாய் அச்சத்தைப் போக்குவதாய், செயலாய், இனிமையாய், வாழ்முதலாய், நஞ்சாய் இருக்கும். தான் இன்னலில் வருந்துகையாலே இன்னலைப் போக்கிய திருநாமங்களைக் கிளியிடம் சொல்கிறாள் தலைவி.

"இந்திரன் பெய்வித்த கல்மழையால் பசுக்களையும் கன்றுகளையும் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து எல்லோரையும் காத்தவனே! பிறரால் இடுக்கண் வந்தபோதுதான் காப்பாயா? உன்னால் வந்த இன்னலில் இருந்து என்னைக் காக்கக்கூடாதா! கல் மழையில் அகப்பட்டவர்களைத்தான் காப்பாயா? துயரக் கடலில் அகப்பட்டவர்களைக் காக்கலாகாதா? ஊர் முழுவதும் துன்பத்தில் இருக்கும்போதுதான் காப்பாயா? ஊர் முழுவதும் அனுபவிக்காத நோயை ஒருத்தி மட்டும் அனுபவித்துக் கொண்டிருக்கும் என்னைக் காக்கலாகாதா? யாவரும் விரும்பத்தக்க திருக்கச்சியூரகத்தில் உறைந்திருக்கும் தலைவனே! சனகராசனின் வில்லை முறித்து மெல்லியளாகிய பிராட்டியுடன் கூடியவனே! திருவெஃகாவில் கண்துயிலும் வேந்தனே! ஒரு மான் கூட்டத்தின் நடுவே இரண்டு சிங்கங்கள் நுழைவது போல நீயும் நின் தமையனும் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் கம்சனுடைய ஆற்றலை அழித்தவனே! கம்சனால் ஏவப்பட்ட கேசிகன் என்ற அரக்கனை அவன் வாயில் கையைவிட்டு வெள்ளரிப்பழம் பிளந்து கிடந்தாற்போல அழித்தவனே!" என்று புலம்புகிறாள்.

தொட்டு உணரக்கூடிய உடலும், பார்வையும், தம் இன்பங்களை இழந்து, தமக்குள் கிடந்து வருந்துமாப்போல இவள் நிலை உள்ளது. இன்பம் நல்கவல்ல ஞானமும் பக்தியும் அழிதலால் சோர்ந்து நின்றாள். முன்பு திருநாமம் சொல்லுதலால் அயர்ச்சி பிறந்தது. அயர்ச்சி போக்கும் என்ற எண்ணத்தில் கிளியைக் கொண்டு திருநாமம் சொல்லுவிக்க, அத்திருநாமத்தின் உள்ளார்ந்த பொருளிலே ஆழங்கால்பட்டு மயக்குற்றுக் கிடந்தாள். 'எல்லோருடை

இன்னலையும் போக்கக்கூடிய பெருமான் எனக்குப் பசலை நோயான இன்னலைத் தந்து போனானே' என்று வருந்துகிறாள். இத்தகைய துன்பநிலை தாய் கூறுகிறாள்.

## உறுபெயர் கேட்டல்

'உறுபெயர் கேட்டல்' என்பது தலைவி தலைவன் பெயரைக் கேட்டு மகிழ்தல். 'தன் தலைவன் தன்பால் இரக்கம் கொண்டு முகம் காட்டாவிடினும் அவரைப் பற்றிய ஒருசொல் காதில் விழுந்தாலே போதும். அதுவே தனக்குப் பேரின்பமாகும்' என்று எண்ணக் கூடியவள் தலைவி. இதைக் குறள்,

"நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு
இசையும் இனிய செவிக்கு"[27]

என்று கூறுகிறது.

எனவே இத்தகைய நிலையில்தான் திருநெடுந்தாண்டகத் தலைவி உள்ளாள். கிளி பெருமானைப் பற்றிக் கூறத் தொடங்குகிறது. 'முளைக்கதிர் குறுங்குடியுள் முகில், அளப்பரிய ஆரமுதம், அரங்கண்மேய அந்தணன், விளக்கொளி, மரகதம், தண்காவிலும் வெஃகாவிலும் இருப்பவனே!' என்று தலைவி பண்டு கற்பித்த முறையிலே கூறியது.

"கார்மேகம் போன்றவனாகிய இறைவனே மழைபெய்து விட்டுப் போகின்ற மேகம் போலல்லாது, திருக்குறுங்குடியில் என்றும் நிலை பெற்றவனாக இருந்து அடியார்களுடைய விருப்பங்களை நிறைவேற்றுபவனே!

நம்மைப்போல் ஓர் எல்லைக்குள் அடங்குபவனல்லன். மூன்று உலகங்களையும் கடந்து அதற்கு அப்பாலும் இருப்பவனே! கடல் போன்ற எல்லையிட முடியாத வடிவினனே! அருமையான அமிருதம் போன்றவனே! பரமபதத்திலிருந்து நேரே திருவரங்கத்துக்கு வந்து கண் வளருகின்றவனே! திருவரங்கத்தில் நிலையாக இருப்பது போலத் தூயவர்களின் உள்ளங்களில் நிலையாக உள்ளவனே! அடியார்களின் உள்ளத்தில் அமர்ந்து மிக்க இறைநிலை, மெய்யாம் உயர்நிலை,

தக்கநெறி, தடையாகித் தொக்கியலும் ஊழ்வினை, வாழ்வினை என்ற ஞான ஒளியைத் தருபவனே!'' என்றெல்லாம் கிளி கூறுகின்றது. ''இன்னலைப் போக்க வேண்டிய பெருமான் இன்னலை விளைவித்து விட்டான். இந்நிலையிலும் நீ என் இன்னலைப் போக்க வந்துள்ளாய்'' என்று கிளியைத் தன்முகம் நோக்கி வருமாறு வேண்டி, ''வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருக'' என்று கிளியை அழைத்து மகிழ்கிறாள். 'நம்மை உணர்ந்தவள் அளவுக்கு மீறிப் புகழ்கிறாளே என்று எண்ணித் தலைவி தன்னை நோக்கி வணங்கும்போது தலைவியினுடைய செயலை எதிர்த்தால் அவள் வணக்கத்தை ஏற்றுக் கொண்டது போலாகிவிடும் என்று கிளி வாளா இருந்தது' என்கிறாள் தாய்.

**ஒப்புவழி உவத்தல்**

இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்ட தலைவி காமநோயுற்றுத் தலைவனின் பிரிவை எண்ணி வருந்துகையில் கிளியின்மூலம் மனவமைதி அடைகிறாள். தலைவனின் திருநாமத்தைத் தன் வாயாலே சொல்லி அதை வீணையில் மீட்டினாள். அதனால் அவளுக்கு முன்பு நிகழ்ந்த கலவி நினைவுக்கு வர, வீணையை எம்பெருமானாகவே வாசிக்கலுற்றாள். 'நோக்குவ எல்லாம் அவையே போறல்' என்று தொல்காப்பியம் கூறுவதால் வீணையைத் தன் தலைமகனாக நினைத்துக் கொண்டாள். இவள் நிலையைக் கண்ட தாய், 'இனி என்னாகுமோ?' என்று கலங்கி நின்று தலைவியின் நிலையைக் கூறுகிறாள். வீணையைத் தாங்கி அதனைப் பெருமானாக நினைத்துக் கொண்டு எம்பெருமான் வீணை வாசிப்பதைக் கண்முன் நிறுத்தி அந்த வீணையைத் தடவும் கையையும், கையைத் தாங்கும் தோளையும், தோளுக்கு இருப்பிடமான எம்பெருமானின் வடிவையும் நினைத்து அவனைக் கலவி நிலையில் தன் மார்பில் சாய்த்துக் கொள்வதுபோல வீணையை அணைத்துக் கொண்டு, பின்வருமாறு கூறுகிறாள்.

''கல்லாலே செய்யப்பட்டு ஓங்கின பெரிய திருமதில்களாலே சூழப்பட்ட காஞ்சீபுரத்தில் திருப்பாடகத்திலே பொருந்தி

வாழ்கின்றவனே! மதயானையைப் போன்றவனே! பகைவர்கள் அணுக இயலாத பாற்கடலில் நன்கு பழுத்த பழம்போலக் கண் வளந்தருளுகின்றவனே! நன்கு பழுத்த கனியை உண்ண இனிமையாய் இருக்கும். அக்கனி உண்பவருக்குக் கிட்டாமல் போனால் அழுகிப் போகும். அதுபோல எம்பெருமான் தன்னை அனுபவிப்பாருடைய செல்வமாய் இருக்க, தன்னை அனுபவிப்பார் பெறாதபோது ஏங்குபவளாய் இருக்கிறான். அப்படிப்பட்ட தலைவனைப் பெற நான் இருக்கையில் எனக்கு முகம் காட்டாது இருக்கிறானே! தாதுக்கள் மிக்க மணமுடையதாக விளங்கும் பூஞ்சோலைகளை உடைய திருவழுந்தூரிலே நின்றருளியவனே! உலகில் உள்ளவர்கள் தன்னைப் புகலாகப் பற்றுபவர்களுக்கு நின்ற திருக்கோலத்தில் காட்சியளித்து, அவர்கள் உன்னுடைய நிலையான அழகையும் அந்த அழகுக்கு அடிப்படையான பண்புகளையும் விரும்பி உன் திருவடிகளைத் தொழுதலால் அவர்களுக்கு உகப்பானவனும் நீயே! எல்லா ஆன்மாக்களும் தன்னை வந்து அடைய வேண்டும் என்று தூண்டுபவனும், அதனால் உகப்பவனுமாகிய நீ அடியாளாகிய என்னிடத்தில் பாராமுகமாக இருப்பது ஏனோ!" என்று கூறி வீணையின் நரம்புகளை மீட்டுவதால் மெல்லிய விரல்களிலே தற்காலிகமான சிவப்புநிறம் தோன்றக் கள்ளம் கபடமற்ற என் மகள் மென்மையாகப் பாடுவதால் இவள் இப்படி எல்லாம் பாட எங்கே கற்றுக் கொண்டாள்? கள்ளம் கபடமற்ற, அறியாமையையும் அளவுகடந்த திறமையையும் ஒரே பொருளில் அமைந்துள்ள திறத்தைத் தாய் தன் மகளிடம் காண்கிறாள்.

**கனவொடு மயங்கல்**

தலைவி வீணையைப் பெருமானாக நினைத்து அதைத் தழுவிய நிலையில் பெருமானிடமிருந்து ஒரு வார்த்தை மொழி வாராமையால் நிலைகுலைந்து அவனைக் கூப்பிடத் தொடங்கினாள்.

தலைவனுடைய உருவத்தோற்றத்தைத் தன் கண்முன்னர் கண்டு அவனை நேரில் அடைய முடியாத நிலையை எண்ணி, கலவி இன்பத்தை நினைத்து கனவோடு மயங்குகிறாள் தலைவி. அத்தகைய

நிலையிலும் பெருமானின் வீரம், அன்பு, புகழ் இவற்றையே பாடுகிறாள். இத்தகைய நிலையை தொல்காப்பியர் கனவொடு மயங்கல் என்பார். இதையே வள்ளுவர்,

**"நனவினால் நல்காதவரைக் கனவினால்**
**காண்டலின் உண்டுஎன் உயிர்[28]**

என்பார்.

தலைவி தலைவனின் பெருமைகளை ஒவ்வொன்றாகக் கூறுவதைத் தாய் பின்வருமாறு கூறுகிறாள்.

"இன்னார் இனியார் என்று பாராமல் வலக்கை இடக்கை என்று அறியாத ஆயரிடம் தோன்றிக் கன்றுகளை மேய்த்து இனிது காக்கும் பெருமானே! நீ கன்று மேய்த்தலை வைகுந்த இன்பத்திலும் பெரிதாக நினைக்கின்றாய். நான் ஒரு கன்றாகப் பிறந்திருந்தால் உன்னைச் சுற்றி வந்திருப்பேன். கன்றுகளை காக்கக்கூடிய நீ என்னைக் காக்கலாகாதா? அருளுவதற்காக இயற்கையோடு நிறைந்த இடத்தில் இனிய பழம் போல மிகச் சுவை தருபவனாக இருக்கின்ற கண்ணபுரப் பெருமானே! ஊர்ப் பொதுவிடங்களில் கூத்தாடி அக்கூத்தில் அழகைக் காண்பார் எல்லோரும் சுவைக்கச் செய்பவனே! தேவரும் மக்களும் காணுமாறு திருவேங்கடமலையில் இரண்டு உலகுக்கும் நடுவான இடத்தில் இருந்து எல்லோரையும் அனுபவிக்கும்படியாக எல்லார் உள்ளத்தையும் கொள்ளை கொள்பவனே! அரக்கர் கூட்டங்களை அழித்த வேந்தனே! விரிபொழில் சூழ் திருநாறையூரில் நின்றருளுபவனே! இருண்ட குழலையுடைய என் கருநிறப் பெருமானே! நீ, நீண்ட, செறிந்த, இருண்ட, கடை குழன்ற மயிரினையும், களைப்புத் தீர்க்கும் உன் வடிவையும் காட்டி என்னை உனக்கே அடிமையாக்கிக் கொண்டு, என்னோடு கலந்து பின் என்னைக் கைவிட்டுப் போவது நியாயமா?" என்கிறாள். 'தலைவன் இவளை மதியாவிடினும் தலைவன்பால் தீராக் காதல் கொண்டதால் அவனையன்றிப் பிற பொருட்களை வேண்டாது அவன் பிரிவில் கண்ணீர் வடித்தபடி என்னையும் உதறித் தள்ளுகின்றாளே' என்கிறாள் தாய்.

## இன்பத்தை வெறுத்தல்

தலைவி தலைவன் மீது கொண்ட காதல் வேட்கையால் மெலிந்து பசலையுற்று கண்துயில் மறந்து தான் காணும் பொருள் யாவும் தலைவனாகவே நினைக்கிறாள். இத்தகைய நிலையில் தாய் அவள் விரும்பி விளையாடக்கூடிய பொருளை முன்வைக்க, அப்பொருளால் பயன் ஒன்றுமில்லை. இந்நிலையைக் கண்ட தாய் 'சிறிதளவு நம்பிக்கை உடையார்க்கு நேரில் வந்து அருள் புரியும் தலைவனான எம்பெருமான் அவனையே நினைந்து உருகும் என் பெண்ணிற்கு அருள் புரியவில்லையே.

என் மகளுடைய அழகையும், கண்ணின் அழகையும் ஒருமுறை கூர்ந்து நோக்கிய தலைவன் அவளழகில் மயங்கி, அவளை நினைத்துப் புலம்பிக் கொண்டிருக்க வேண்டிய அவன், மடலெடுக்க வேண்டியவனுமாவான். ஆனால் என் பெண் அவன் படவேண்டிய துயரையெல்லாம் அனுபவித்துக்கொண்டிருக்கிறாள் என் மகள்' என்கிறாள். வேட்கை மீதுறலால் "வண்ணந் திரிந்து புலம்புங்காலை"[29] தலைவியின் மெய்யின்கண் பல மாற்றங்கள் தோன்றுகின்றன. இவ்வேறுபாட்டைத் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில், ஒவ்வொரு நிலையை விளக்குகிறார். இத்தகைய வேறுபாட்ட நிலையை வினவ வந்தார்க்குக் கூறிப் பசலைநிறம் பார்ப்பதற்கு இனிமையாக இருக்கிறது என்று தன் உள்ளத்துள் உவகைகொண்ட தாய் ஆனந்தக் கண்ணீர் ததும்ப வேண்டிய இவளுடைய கண்கள் துயரக் கண்ணீரை வடிக்கின்றன. துயரத்தை வெளியே காட்டாது அடக்கத்தோடு இருக்க வேண்டிய அவள் என் உரைகளைக் கேட்டவுடன், வீட்டின் வெளியே வர, வெளியிலும் உள்ள பொருட்கள் திருட்டிவிடம் என்னும் பாம்பு போல வருந்த அமைதி இல்லாமல் இருக்கவே யாரிடமும் பேசாது இருந்தாள்.

அங்குச் செங்கால் மடப்புறவம் தன் பேடையுடன் கொஞ்சிப் பேசும் சொற்களைக் கேட்ட அளவில் எம்பெருமான் கலவி நேரத்தில் தன் காதுகளில் இரகசியமாகப் பேசிய பேச்சு நினைவுக்கு வர, புறாக்களைக் கண்டு நெஞ்சம் உருகியது. இனிய தென்றல் காற்றின்

இனிமைபோல களைப்பைப் போக்கும் வடிவினையுடைய "திருத்தண்கால்" என்ற தலத்தையும், "திருக்குடந்தைப் பதியையும்" மழையின் காரணமாக முதலாழ்வார் மூவரும் ஒதுங்கிய இடமான குளிர்ந்த, "திருக்கோவலூரையும்" பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் நிற்கின்றாள்.

பெண்களுக்கே உரித்தான குணங்களோடு இல்லாமல் இப்படி அடக்கமில்லாத் தன்மையைப் பார்த்து, "நீ செய்யும் செயல்கள் நம் குடிக்கும், பெண்மைக்கும் ஏலா, என்று நான் கூறியவுடன் இதஞ்சொல்வார் முகத்தில் விழியேன், பிரிந்தோர் படுகிற நோயை அறிபவர் முகத்தில் விழிப்பேன்" என்று கூறித் திருநறையூர்ப் பாடுவாளாயினள்.

## நிறையழிந்தார் நிற்கும் நிலை

நங்காய் நங்குடிக்கிதுவோ நன்மையென்ன நறையூரும் பாடுவாளாயினாளோ இனி நாம் இவளுக்கு எத்தகைய அறிவுரை வழங்கினாலும் கேளாள். இவளின் கருத்தை அறியத் தாய் முற்படுகிறாள். தன் இயல்பைப் பற்றி முன் உணர வேண்டும், என்பது தாயின் கொள்கை. அது ஏற்றதொரு முடிவாகாது, இன்ப நுகர்ச்சிக்கு ஏற்பத் தன் தன்மை அமைய வேண்டுமே அன்றித் தன் தன்மைக்கு ஏற்ப இன்ப நுகர்ச்சி அமைதல் இல்லை என்பது மகளின் கருத்து. இறங்கு துறையிலே தலைவனுடைய அழகில் ஈடுபட்டு, இந்த அழகோடு நித்ய சூரிகளும் அனுபவிக்கும் எம்பெருமானுடைய ஞான, சக்தி, பலம், வீரியம், பொலிவு என்ற குணங்களை அனுபவிக்கிறாள்.

'தலைவனின் நிறம் கார்வண்ணம், அவனுடைய திருக்கண்களும், திருவாயும், திருக்கைகளும், திருவாயிரண்டும், தாமரைப் பூப்போன்ற நிறமுடையன. அவன் பூமிப்பிராட்டிக்கு வசப்பட்டிருப்பவன். குளிர்ந்த செந்தாமரைப்பூவில் பிறந்த பெரிய பிராட்டியாரிடம் காதல் கொண்டவன் என்றெல்லாம் கூறிய இவள் அத்தகைய இறைவனிடம் பற்றுக் கொண்டாளே, தன்னுடைய ஆற்றாமையை அடக்க முடியாது இருக்கின்றாளே! இத்துன்பத்திற்கு

ஆளாக்கிய எம்பெருமானின் திருவரங்கம் எங்கே? என்கிறாள். நீரின் தன்மையுடையவன் எழுந்தருளி இருக்கின்ற திருநீர்மலைக்கே போகக் கடவேன் என்கிறாள், இவள் இப்படி இருப்பதற்குக் காரணம் நான் செய்த பாவமோ, இதுதான் நிறையழிந்தார் நிற்கும் நிலையே' என்று தாய் வருந்துகிறாள்.

இப்பாடலில் இவளுக்கு இன்பம் தரக்கூடிய பொருளான வீணையும், விளையாடக்கூடிய பாவையும் வெறுப்புக்குள்ளாகி, தலைவன்பால் ஏற்பட்ட "காதல் மிகுதலே" முதன்மை பெறுவதால் இறைவன் எழுந்தருளிய இடத்திற்கேற்பப் போகத் துணிகிறாள் தலைவி. இதைத் தொல்காப்பியர்,

"உடம்பும் உயிரும் வாடிய கண்ணும்
என்னுற் றனகொல் இவையெனின் அல்லதைக்
கிழவோற் சேர்தல் கிழத்திக்கில்லை"[30]

என்கிறார்.

"பெருமிதம் என்பது எல்லோரோடும் ஒப்ப நில்லாது பேரெல்லையாக நிற்றலேயாம். இத்தகைய பெருமிதம் காமம் பற்றியும் பிறக்கும்"[31]

தாய் தான் எவ்வளவு சொல்லியும் கேளாது தன் பெண் இருந்தமையால் இதுவன்றோ நிறையழிந்தார் நிற்கும் செயல் என்று தானும் தன் பெண் செயலுக்கு உடன்பட்டமை தோன்றப் பேசினாள். அந்நிலையில் பேச வந்தவர்கள் பெண்மைக்கு உரிய செயலை உன் மகள் நோக்கவில்லை. அவளால் விரும்பப்படுகிறவன் திறத்தால் நோக்கின், அவள் வேற்றுப் பொருளில் ஈடுபட்டவளாதலின் உன்னை நோக்காள். நீ அவளிடம் உலக வழக்கத்தை எடுத்துச் சொல்லக் கூடாதா என்று கேட்கத், தாய் என் பேச்சு மாறுபட்ட பயனைத் தருவதால் நான் குறிப்பிட்ட அதனைக் காரணமாகக் கொண்டு அவன் திருத்தலம் நோக்கிப் புறப்பட்டு விட்டாள் என்கிறாள்.

'என் மகள் ஒப்பற்ற அழகுடையவள் எம்பெருமானுடைய மார்பாகிய ஓர் உறுப்பை விடுத்து அப்பால் செல்ல மாட்டாதவளாக இருக்கிறாள்.

எம்பெருமானின் திருமார்பில் எப்பொழுதும் உறைந்து இருக்கின்ற பெரிய பிராட்டியாரின் மேன்மையைக் கண்ணாலே கண்டும் கூட, இவள் அவனிடம் அன்பு கொண்டவளாக உள்ளாள். இவள் எம்பெருமான் தொடர்பை விட்டுவிட வேண்டும் என்று கூறிய செய்தி இவள் பற்றுதலுக்கே பெரிதும் உதவி விட்டது.

தாய் நன்மையையே பேசுவளாதலின் தலைவிக்கு உதவாள். எனவே இவளுடைய தோழி பக்கத்தில் வந்து நிற்க, அவளிடம் 'பிரிதல் துன்பத்தின் வாட்டத்தைப் போக்கத் திருவரங்கமாகிய பொய்கையில் ஆடப்போவாம்' என்கிறாள். என் வார்த்தையைச் சிறிதும் கேளாத இவள் தான் செய்யும் செயலுக்குத் தோழியைத் துணை தேடுகிறாள்.

முதலில் குடந்தையை வழிபட்டுப் பிறகே திருப்பேர் நகருக்குச் செல்ல வேண்டும். இவளோ மாற்றிப் பேசுகிறாள். அவன் கலவியை விரும்பிச் செல்லும் இவள் அணி அரங்கம் ஆடுதும் என்று கூறித் தன் தடையைப் பற்றிக் கவலைப்படாமல் தன் மனதால் அரங்கத்திற்குச் சென்றுவிட்டாள். எம்பெருமானோடு பொருந்திய பிறகு என்னுடைய நட்பினை மறந்து விட்டாள். இவளுக்குச் சமமாக யார் இருப்பார்? உங்கள் பெண்களும் அர்ச்சாவதாரத்தில் இப்படி ஈடுபட்டு இருப்பார்களா?' என்று தன் பெண்ணின் நிலையை அயலாரிடம் பேசி அவர்களுடன் உரையாடி முடித்துத் தன் மகளின் நிலையைத் தன் மனதில் அமைதியாக நினைத்துப் பார்த்து அவள் சாதாரண பெண்ணல்லள் பெருந்தவத்தினள் என்று பெருமிதம் கொள்கிறாள் தாய். இங்கு கூறப்பட்ட, "பெருமிதம்" தலைவியின் காமத்தை எண்ணித் தாய் பெருமிதம் கொள்வதாம்.

இப்பெண்பிள்ளைகளிடம் தாய் தன்னுடைய காவலை விடுத்த அளவில் எம்பெருமான் எல்லோரையும் காக்கும் பண்பினை வாய்விட்டுப் பேசிப் பொழுது போக்குகிறாள். இவளைப் பெரும் பேறு உடையவள் என்று கூறுவதைவிட இவளுக்கு உண்மையாக வேறு யாரைக் கூறமுடியும் என்கிறாள் தாய்.

திருநெடுந்தாண்டகத்தில் – 1–10 பாசுரங்கள் ஆழ்வார்

தாமான தன்மையில் நின்று "திருக்கோவலூரை" அனுபவிக்கப் பெறாமையால் வந்த ஆற்றாமையாலே கூப்பிட்ட இடத்திலும் அவன் வந்து காட்சி வழங்கப்பெறாமையால் மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழ்நாளைக் கழிப்பதற்காக அனுபவிக்கத் தொடங்கி அது கிட்டாமையால் வந்த ஆற்றாமையாலே, எம்பெருமான் ஆறும், பேறும் என்றிருப்பவர் எனவே எம்பெருமானை அடைய ஏனைய உபாயங்களைப் பின்பற்றி விட்டோம், என்று இறைவன் கருதுகின்றானோ என ஐயுற்றுப் 'பொன்னானாய்' என்கிற பாசுரத்தில் எம்பெருமானிடம் தாம் வேறு உபாயத்தைப் பின்பற்றி அவனை அடைய முடியவில்லை என்று அவனைச் சமாதானம் பண்ணினார்.

தலைவியின் நிலை பற்றித் தாயிடம் வினவ வந்தவர்கள் அவன் ஆற்றாமையை, எம்பெருமானை அடைய அவள் பின்பற்றும் உபாயமாகக் கருதியவிடத்துத் தாய்நிலையில் நின்று, ஆற்றாமை உபாயமாகக் கொள்ளப்பட்டதன்று என்பதனை விளக்கி, அவர்கள் உள்ளத்தைச் சமாதானம் பண்ணினார். எம்பெருமானையே அடைவதற்குரியவயவனாகப் பற்றுபவர்கள் உடலில் உயிர் பொருந்தியிருக்கும் காலம் முழுதும் இறைவனுடைய பண்புகளும், செயல்களும் பற்றிய பேச்சுக்களே வாழ்வினை கடத்துவதற்குரிய பொருளாகும்.

'ஒரு பெண்ணைக் காப்பதற்கு உண்ணாது, உறங்காது, அவளைச் சிறை செய்த கொடியவனுடைய செயல்களை அழித்தவன். தன் பேரன் அநிரித்தனைக் காக்கும் தன்மையாய் ஆயிரம் தோள்களை உடையவனான பாணாசூரனைத் தோல்வியடையும்படி செய்வதற்கு அலையெறிகின்ற கடலாகிய கோட்டையைக் கடந்து பாணபுரத்திற்குச் சென்றவன். வீரலக்குமியைப் பெற்றவனும், பிரளயத்தில் பூமியைத் திருவயிற்றிலே வைத்தும், அப்பூமியைப் பிறகு வெளிப்படுத்தியும், திருவிக்ரம அவதாரத்தில் அப்பூமியை அளந்தும், இவ்வுலகத்தைக் காத்தவனுமான பெருமை பொருந்திய எம்பெருமானுடைய திருநாமங்களை இடைவிடாமற் சொல்லுகின்ற இப்பெண்பிள்ளையை இந்நிலவுலகத்தில் பெரும் பாக்கியம் செய்தவள்

என்று சொல்லலாமேயொழிய வேறு என்ன சொல்ல இயலும்?' என்று மகளின் நிலையைத் தாய் கூறுகிறாள்.

## தலைவி கூற்று

திருநெடுந்தாண்டகத்தில் தலைவியின் கூற்றாக ஐந்து பாசுரங்கள் அறத்தொடு நிற்றல் என்ற நிலையில் அமைந்துள்ளன.

## அறத்தொடு நிற்றல்

அறத்தொடு நிற்றல் என்பது அறநெறியில் நிற்றல், கற்பின் வழியில் நிற்றல் என்று பொருள்படும். "அறம் என்பது பல பொருள்களையும் தழுவிய பொதுச் சொல்லாயினும் ஈண்டுப் பெண்ணுக்குரிய முதற்பண்பான கற்பையே குறிக்கும். கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோர்க்கு வெளிப்படுத்தல் என்பதே இத்துறையின் பொருள்"[32]

**"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"[33]**

என்கிறார் தொல்காப்பியர்.

நாணத்தைக் காக்க உயிர்விடுக, கற்பைக் காக்க நாணத்தை விடுக என்கிறார். இதனைப் "புரைதீர் கிளவி" என்று கூறுவர் தொல்காப்பியர். "வரைதல் வேண்டித் தோழி செப்பிய புரைதீர்கிளவி புல்லிய எதிரும்"[34] என்பதால் களவொழுக்க நிகழ்ச்சியைக் குற்றம் தீர்ந்த அறச் செய்கையாகும் என்று இவர் கருதுவர்.

இப்பகுதியை நச்சினார்க்கினியார், "அறன் என்று சொல்லப்படும் தன்மை இருவர் கண்ணும் குற்றம் தீர்ந்த எதிர்ப்பாடென்று செவிலி இடத்தே கூறி அக்கிளவியை நற்றாய் இடத்தும் செலுத்தினும் என்று உரை கூறுவர்"[35]

களவியலின்கண் அறவழியில் நின்று முறையே தலைவி தோழி வாயிலாகச் செவிலிக்கும் செவிலி வாயிலாக நற்றாய்க்கும் களவை வெளிப்படுத்தி நிற்றலே அறத்தொடு நிற்றலாகும்.

இதை நற்கவிராசநம்பி ஆசிரியர், "தலைமகள் வரும் வழியில் வரும் துன்பங்களுக்கு அஞ்சுகின்ற இடத்தும், தமர் வரைவு எதிர் கொள்ளாவிடத்தும், வேற்று வரைவு நேரும் இடத்தும், காவல் எல்லை கடந்தவிடத்தும் அறத்தொடு நிற்றல் தோன்றும்"[36], தம் அகப்பொருள் விளக்கம் என்ற நூலில் குறிப்பிடுகிறார். தலைமகள் அறத்தொடு நிற்கும் திறனை ஏழு நிலைகளாகக் கூறுகிறார்.[37]

திருநெடுந்தாண்டகத்தில் தாம் சொல்கின்ற சொற்களைக் கேட்கும் நிலையில் இல்லாத தலைவி தனது ஆற்றாமையைத் தோழிக்குக் கூறி அறத்தொடு நிற்பாள்.

தொல்காப்பியத்தில் "மறைந்தவற் காண்டல் முதல் நிறைந்த காதலில் சொல்லெதிர் மழுங்கள்"[38] வரை சொல்லப்பட்ட கிளவிகளில் வேட்கைக் குறிப்புக் கூற்று நிகழும். "கைபட்டுக் கலங்கினும் முதல், கூறிய வாயில் கொள்ளாக்காலை"[39] என்று சொல்லப்பட்ட பனிரெண்டு கிளவிகள் தலைமகளால் தோழிக்கு உரைக்கப் பெறும். அதாவது மேனி சிதைந்தவழி மனைப்பட்டுக் கலங்கிக் காதல் மிக்குத் தோழி கேட்க உரைப்பாள்.

கூறப்பட்ட பனிரெண்டில் "நொந்து தெளிவொழித்தல்", "பிரிந்தவழிக் கலங்கல்", "கூறிய வாயில் கொள்ளாக்காலை" என்ற நிலைகளின் கூற்றுக்களே இத்தாண்டகத்தில் பொருந்தியுள்ளன.

இவற்றுள், ஐந்து பாசுரங்கள் அறத்தொடு நிலை, இரண்டு பாசுரங்கள் தூது, ஒரு பாசுரம் ஊடல் ஆகும்.

திருநெடுந்தாண்டகத்தில் தோழி தலைவியின் ஆற்றாமையைக் கண்டு கண்ணீர் துடைக்க, தலைவி களவில் நடந்த நிகழ்ச்சியைத் தோழிக்குக் கூறி அறத்தொடு நிற்பாளாயினாள். "தோழி தானே செவிலி மகளே"[40] என்பதால் களவுக் காலத்தில் இன்றியமையாதவளாகவும், உதவி செய்பவளாகவும், தலைவிக்குத் துணையாகவும் நிற்பவள். தலைவியின் நிலையைத் தன் மதியுடன்பாட்டால் அறிந்து கொள்கிறாள் தோழி.

**காட்சி**

களவில் கூறப்படும் "காட்சி" என்பது தலைமகன் தலைவியைக் காண்பது. இது தலைவனிடம் தோன்றும்போது ஐயமாகவும் தலைவியிடம் தோன்றும்போது அச்சமாகவும் தோன்றும். தலைமகளது உள்ளத்து வேட்கையினைத் தலைவனுக்கு விளக்க அறிவிப்பன அவளுடைய கண்கள். இதனைத் தொல்காப்பியர்,

**"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்கு**
**கூட்டி உரைக்குங் குறிப்புரை யாகும்"[41]**

என்கிறார். இருவருக்குங் காமம் கவர்ந்து நின்ற அறிவை ஒருப்படுத்தற் பொருட்டு வேட்கையோடு கூட்டிக் கூறும் காமக் குறிப்புச் சொல் கூறுவன இருவருடைய நாட்டங்களும்.

திருநெடுந்தாண்டகத்தில் தலைவியின் கூற்றாக வரும் பாசுரமான, 'மைவண்ண நறுக்குஞ்சி' "காட்சி"யைச் சேர்ந்தது. தன்னைத் தலைவன் காணாமல் தான் அவனைக் காணும் காட்சியை, "மறைந்தவற் காண்டல்" என்கிறார் தொல்காப்பியர். இங்குத் தலைவி தலைவன் பிரிவால் கொண்ட ஆற்றாமையைக் கண்டு வருந்தி இருக்கும் நிலையைக் கண்ட தோழி உன்னை இத்தகைய சூழ்நிலைக்கு ஆளாக்கியவன் யார்? அவன் வரலாறு என்ன என்று கேட்கத் தலைவி தலைவன் வந்தவிதத்தைக் கூறுகிறாள்.

கார் மேகத்தின் நிறமும், வெளுப்பு என்று கூறும் அளவிற்குத் திருக்குழலின் கருமை இருந்தது. திருமேனிக்கு நறுங்குஞ்சி பின்னால் திரளாகச் சுருண்டு இருந்தது. அந்தக் குழலில் வீசும் காற்று எங்கும் நறுமணத்தைப் பரப்பிக் காட்சிக்கு இனிமையாய் இருந்தது. மனத்திற்கு இன்பமாய் வளைந்த நுண் மயிரை உடைய திருக்குழலின் தொகுதி பின் அசைய எம்பெருமானைத் தான் கண்டதாக் கூறுகிறாள்.

'தலைவன் எதிர்பாராத விதமாகச் சோலைக்குள் வந்து நேரடியாக என் உருவைக் காண, நான் அவனை நோக்க, அவன் என்னைக் காணாதவன்போல் சற்று முகத்தைத் திருப்பிக் கொள்ள, முன்புறம் நெற்றி வரையுள்ள மயிர் பின்புறம் தோள்வரை படிந்த நிலையைக் கண்டேன்' எனத் தலைவி கூறுகிறாள்.

இப்பாடலில், "என்முன்னே நின்றார்" என்று கூறுவதால் தலைவி தலைவன் காணுமாறு நின்றிருந்தாள் என்று கொள்ளலாம். எனவே இருவரும் ஒருவரையொருவர் கண்டு கொண்டதால் "தற்காட்டுறுதல்" எனத் தொல்காப்பியர் கூறுவதற்கு இக்காட்சி பொருந்தும்.

'குழலின் கருமையால் கண்கள் இருண்டு எம்பெருமான் திருமுகம் புலப்படாதிருக்கச் சந்திரன் இரண்டு உதித்தாற்போல அவரிரு காதுகளில் மகரக்குழைகள் இருந்தன. அவரது உள்ளங்கை தாமரை மலரையும், அதரங்கள் கமலத்தையும் ஒக்கும், தெய்வத்தன்மையும் மனிதத்தன்மையும் தம்மிடம் கலந்திருக்கத் தலைவராய், அடியவராய், அல்லாமல் இறைமையும் மனிதநிலையும் தம் வடிவில் கலந்து தோன்ற வந்தார்.

எந்தப் பெருமானை அடைவதற்குத் தாம் மடலேறுதல் முதலாய செயற்கரிய செயல் செய்ய வேண்டுமோ அப்பெருமானே எனக்கு இரங்கிக் காட்சி தருவதோடு மட்டுமில்லாமல் திருமணம் செய்து கொள்வதாகத் தன் கைச் செயல்களாலும், சுருக்கமான சொற்களாலும் குறிப்பிட, சொற்களால் குறிப்பிட இயலாத செய்திகளைத் தம் கண்களால் தெரிவித்தார்.

**"கண் களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தின்**
**செம்பாகம் அன்று பெரிது"**[42]

எனவே, அவரின் கண்ணழகுக்குத் தோற்று என் நெஞ்சைப் பறிகொடுத்தேன். அவர் கூறிய சொற்களுக்கு நான் எதிர்மொழி கூறவில்லை. பறிகொடுத்த அளவில் என் உள்ளச் சிதைவு தெரியாதபடி மறைக்க முயலத் தாம் அதனை உணர்ந்து என்னை நோக்கி நடந்து வந்தார். இவ்வாறு பலகாலும் கிட்டுதற்கரிய பெருமானை அவன் வாயாலே நான் தசரதன் மகன், மானுடன் என்று கூறியதை உணர்ந்தும், அவளைப் பரம்பொருள் என்று முனிவர்கள் கூறியதை மனதில் வைத்துக்கொண்டு இயல்பான மெய்யுணர்வாகப் பாராட்டாமல் தேவர் என்றே அஞ்சி நின்றேன்' என்கிறாள் தலைவி.

தலைவன் கூறிய சொற்களுக்கு எதிர்மொழி கூறாது தலைவி நிற்பதை "நிறைந்த காதலின் சொல்லெதிர் மழுங்கல்" என்பார் தொல்காப்பியர். இங்குத் தலைவி தலைவன் கூற்றிற்கு எதிர்மொழி கூறாது, அஞ்சியே நிற்பதால் நிறைந்த காதலின் சொல்லெதிர் மழுங்கல் என்ற கிளவி பொருந்தும்.

## தலைவன் செயலில் தலைவி ஈடுபடல்

'தன் வேட்கையைப் புலப்படுத்திய தலைவனைக் கண்டு நீ அஞ்சிய பின் என்ன நிகழ்ந்தது?' என்று தோழி கேட்கத் தலைவி, 'தன் ஆற்றலால் என்னைக் கவர வேண்டும் என விரும்பி மிடற்றிசையான "நைவளம்" என்ற பண்ணைக் கொண்டு இராகம் பாடியும், இடையிடையே என்னை நோக்கியும் இவள் மயங்கவில்லையே' என்று நாணம் கொண்டான்.

அவனுடைய இசைக்கு என் மனமும் கண்களும் மயங்கின. இதனைத் தொல்காப்பியர், "பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்" என்பார். இது தலைவனுடைய செய்கைக்கு உடன்பாடு காட்டி நிற்கும் இடமாகும். எனவே, தலைவி தலைவனின் செயலில் ஈடுபட்டாள்.

'இரண்டு கைகளை உடைய பெருமாள் நான்கு கைகளோடு காட்சி தர அவன் இசைக்கு மயங்கி, அவனுக்கு அடிமையாகி என்னை எழுதிக் கொடுத்து விட்டேன். அவன் என்னைத் தழுவிக் கொள்ள அவனிரு தோள்கள் பூரிக்க நான்கு தோள்களைப் போன்று தோன்றின. பின் அவனை நாளும் காண வேண்டும் என்று எண்ணி நான், 'தங்கள் ஊர் சேய்மையில் உள்ளதோ?' என்று கேட்க "நின்னிற் பிரியேன் பிரியின் ஆற்றேன்" என்பதைக் கருத்தில் கொண்டு, 'நீ இருக்கும் இடம்தான் எனக்கு இருப்பிடம் என் பழைய இருப்பிடங்கள் எனக்கு இருப்பிடமல்ல' என்று என் இரு கால்களைக் குறிப்பிட்டுப் போனான். நான் வசமிழந்து நின்றேன்' என்கிறாள் தலைவி.

## வேட்கையால் ஏற்பட்ட இழப்பு

'உன் நலம் பாராட்டியவனை நீ போகக்கூடாது என்று சொல்லக் கூடாதா?' என்று தோழி கேட்கத் தலைவி, "சொன்னேன்,

அதற்குள் பொருத்தமில்லா இடத்தில் இருத்தலாகாது என்று எண்ணிக் கருடன் பெருமானை அழைத்துச் செல்லவே என் வார்த்தை அங்கு எடுபடவில்லை. என்னைக் காப்பதாகக் கூறிய தலைவன் காப்பதாகவே கருதிப் பிரியும்போது என் உள்ளத்தில் பரவி இருக்கின்ற நோயைத் தந்து போனான்''. இந்நோய் கண்ணால் கண்டவுடன் மருந்து போடக் கூடிய நோயன்று. சிந்தை நோய், நெஞ்சில் ஏற்பட்ட நோய்க்குப் பரிகாரமில்லை. இந்நோய் அவ்வப்போது நிலைமைக்கு ஏற்ப அடையத்தக்க உறுதிப்பொருளாய், இன்ப நுகர்ச்சிக்கு உதவுவதாய்ப் பிரிந்திருப்பார்க்கு நோயாக இருக்கும். 'இன்ப நுகர்ச்சி இருவருக்கும் ஒத்திருக்க நோய் முழுவதையும் எனக்கே தந்து போனான்' என்று தலைவன் பிரிந்தவழிக் கலக்கமுற்றுக் கூறுகிறாள்.

மெய்ப்பாட்டியலில் தலைவிக்கு மெய்யின்கண் தோன்றுகின்ற மாற்றமான ''பசியடநிற்றல்'', ''பசலை பாய்தல்'', ஊழவிதைவரல் உடைபெயர்த்துடுத்தல்'' போன்றவற்றைக் கூறுவர் தொல்காப்பியர். மேலும் இத்தலைவிக்கு மெய்யின்கண் இம்மாற்றம் ஏற்படத் தலைவன் பிரிவால் கலக்கமுறுவதால் ''பிரிவுழிக்கலங்கல்'' என்ற கிளவிக்குப் பொருத்தமாக உள்ளது.

''காமம் மிக்கவழி (அ) சொல் நிகழ்ச்சியின்மையின் தான் கருதிய பொருண்மேல் வேட்கையைத் தலைமகள் தானே யறிவாள்''[43] என்பதால், 'அவர் என்னோடு கூடின காலத்தில் அவர் சொன்ன வார்த்தைகள் இவையே இளமை வாய்ந்த தென்னையின் கள்ளைக் குடித்துச் சேவல்கள் வாழ்கின்ற திருவரங்கமே எம்மூர்' என்கிறார். அப்படிப்பட்ட ''கள்ளும் பைந்துழாய் மாலையானைக் கனவிடத்தில் யான் காண்பன்''[44] என்கிறாள். 'இக்களவியால் எனக்கு ஆற்றாமைமிக்கு என்னையும் காத்துக் கொள்ளாமல், அவனையும் காக்கமுடியாமல் போனது. அவனோ நாம் எண்ணிய பொருள் நமக்குக் கிடைத்தது என்று மகிழ்வோடு போனான். எனக்கோ தன்னியல்பு கெட்டு, அவனைப் போகாதே என்று தடுத்த துன்பமும் அவன் பிரிந்ததால் வந்த துன்பமும் சேர்ந்து துயரம் இரட்டித்து விட்டதே' என்று கலங்குகிறாள்.

இத்தகைய செய்திகளை நோக்கும்போது தலைவியின் துயரமே இங்குக் கூறப்படுகின்றன. மேலும் அவளே தன் துயரை வெளிப்படுத்திக் கூறி கலங்குவதால், "பிரிவுழிக்கலங்கல்" என்ற கிளவி மிகவும் பொருத்தமாகவே உள்ளது எனலாம்.

குறுந்தொகைப் பாடல் ஒன்று:

**"கேட்டிசின் வாழி தோழி அல்கல்**
**பொய்வலாளன் மெய் உற மரீஇ**
**வாய்த்தகை பொய்க்கனா"[45]**

எனக் கனவோடு மயங்கும் திறத்தில் தலைவனைத் தலைவி பொய் வலாளன் என்று கூறுவதாகத் தெரிகிறது.

## தலைவன் பிரிவால் ஏற்பட்ட கண்ணீர்

'நீ தலைவனுடைய உகப்பிற்கு உரியை என்றால் அவருக்கு அடிமையான கருடன் உனக்கும் அடிமைதானே. ஆதலால் நீ கருடனைப் போகாதே என்று சொல்லியிருக்கலாமே!' என்று தோழி கேட்கத் தலைவி, 'பெருமானை அழைத்துச் செல்ல அடியார் கூட்டம் வரவே, அவர்களைக் கண்ட அளவில் பூரித்தான். அந்நிலையில் அவனைத் தடுக்க இயலவில்லை. என் கைக்கு அடங்கக் கூடிய வளையல்கள் கழன்றனபோல எனக்கு அடங்காத எம்பெருமானும் பிரிந்து போனான். எம்பெருமானுடன் கூடியபோது ஏற்பட்ட மகிழ்வுபின் துயரை விளைவித்தது'.

இப்பாசுரமும், களவியலில் தலைவியின் கூற்றாகப் "பிரிவுழிக்கலங்கல்" என்பதற்குப் பொருந்தும். தலைவனின் பிரிவால் அவள் இயற்கை நிறமும் மாற, ஒளியும், வடிவமும் பெருமிதமும் அவரோடு கலந்து போயின. 'என் கைகளையும் கால்களைப் பிடித்த பெருமான் கையில் இப்போது சங்கும் சக்கரமும் உள்ளன. அவர் பிரிவால் துயரக் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறேன்' என்று தலைவி கூறுவதால் இதுவும், "பிரிவுழிக்கலங்கல்" என்ற கிளவிக்குப் பொருந்தும்.

**தலைவனால் பெற்றனவும் இழந்தனவும்**

தலைமகன் பிரிவால் கலக்கமுற்ற தலைவி, பின்வருமாறு கூறுகிறாள். 'காளமேகத்தைச் சூரியன் கதிர்களாலே முழுவதும் ஒளி செய்தாற்போலே திருஆழி ஆழ்வானுடைய ஒளி எம்பெருமான் திருமேனி முழுவதும் பரவியிருத்தலால் மின்னிலங்கு திருவுருவம்' என்கிறாள்.

'காலமுழுவதும் அனுபவித்தாலும் ஏனைய உறுப்புகளில் மனம் செல்லாதபடி இனிமையும் காக்கும் இயல்பும் பொருந்திய தோள்களையும், பகைவர்களை அழிக்க உதவிய கைகளையும் காணக் கிட்டியவர்களைக் குற்றுயிராக்கும் கண்களையும் அழகாகப் பேசும் திருவாயையும் தன் கார்மேனி அழகுக்குச் சிறப்பாக விளங்கும் மகரக் குழையையும் காட்டி என்னை வசீகரித்தான்' என்று தலைவனால் பெற்றவை பற்றித் தலைவி கூறுவதால் "பெற்றவழி மலியினும்" என்ற கிளவிக்கு இச்செய்திகள் பொருத்தமாக அமைந்துள்ளன.

அத்தகைய பயனைப் பெற்ற தலைவி, 'தன் உடமைகளை எல்லாம் எனக்கு வழங்குபவர்போல் வந்து என் அழகு நறுமணம், மென்மையாகிய சிறப்பியல்புகளையும் அச்சம், மடம், நாண், பயிர்ப்பு என்ற ஆன்ம குணங்களையும் அழிக்க முடியாத என் பெண்மையையும் அடக்கத்தையும் அதற்கு அடிப்படையான என் மனத்தையும் தாம் கைப்பற்றிக் கொண்டு தமக்கு அடிமையாகுமாறு செய்து என் ஒளி வளையும் மாநிறமும் கைக்கொண்டு போனார்' என்று பிரிவினால் கலங்குகிறாள்.

எனவே, இப்பாசுரத்தில் "பெற்றவழி மலியினும்", "பிரிந்த வழி கலங்கினும்" என்ற கூற்றுகள் பொருந்தியுள்ளன.

'அப்படி அவன் பிரிந்து போகும்போது நான் உயிருடன் இருக்க வேண்டும் என்பதற்காகச் செறிந்து மரப்பொழில்கள் நிறைந்த நீர்வளம் பொருந்திய அரங்கம் தம்முடைய ஊர் என்று கூறிச் சென்றான். செல்லும்போது அவன் பின்னழகில் மனத்தைப் பறிகொடுக்கத் திருவரங்கத்துக்கு என்னை அழைத்துக் கொண்டு போகாது

சென்றுவிட்டார்' என்கிறாள். இக்கருத்தையே திருக்குறள்,

**"மற்றுயான் என்உளேன் மன்னோ! அவரொடுயான்**
**உற்ற நாள் உள்ள, உளேன்"[46]**

என்று சுருக்கமாகக் குறிப்பிடுகிறது.

**வண்டுவிடுதூது**

சங்க இலக்கியப் பாடல்களில் தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாது அஃறிணைப் பொருள்களையும் உயர்திணைப் பொருள்களையும் தலைவன் பால் தூதாக அனுப்பவதுண்டு. அஃறிணைப் பொருளை விளித்துக் கூறுதல் "காமமிக்க கழிபடர் கிளவி" என்று சொல்லப் பெறும்.

"சொல்ல மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபில் தொழிற்படுத்தடக்கியும்"[47]

என்று தொல்காப்பிய நூற்பா கூறுவதுபோலச் சொல்லா மரபினவாகிய வண்டையும், நாரையையும் தூதாகத் தலைவி அனுப்புவாள். தூது விடுவதற்கு உரிய பொருள் இவைதாம் என்ற வரையறை இல்லை.

**"இயம்புகின்ற காலத்தெகின மயில் கிள்ளை**
**பயன்பெறு மேகம் பூவை பாங்கி – நயந்தகுயில்**
**பேதை நெஞ்சம் தென்றல் பிரமம் ஈரைந்துமே**
**தூதுரைத்த பாங்குத் தொடை"[48]**

என்ற பாடல் இயம்புகிறது.

"களவு, கற்பு, ஒழுக்கங்களுக்கு வாயில்களாகப் பயன்படுவோர் தூதுவர் என்றழைக்கப்படுகின்றனர்"[49]. திருநெடுந்தாண்டகத்தில் (26–27) பாசுரங்கள் முறையே வண்டு, நாரை என்ற இரண்டு பறவைகளும் தலைவியால் தூதாக அனுப்பப் படுகின்றன.

இருபத்து ஆறாவது பாசுரத்தில் தோழி தலைவியை வினவவில்லையாதலால் தலைவி தனக்கு மறுமொழி கூற வாய்ப்பு இல்லாமையால் பழைய ஆற்றாமை மீண்டும் ஏற்பட நம்மை அவன் அறியாமையால் பாராமல் இருக்கிறான்; நாம் அவனை அறியச் செய்தால் தவறாது வருவான் என்று கருதி வண்டைத் தூதாக விடுகிறாள்.

வண்டு தனக்கு அண்மையில் கூடி மகிழ்ந்திருப்பதைப் பார்த்த தலைவி புணர்ச்சியிலே பெரிதும் ஈடுபட்டிருக்கும் இவ்வண்டு தன் துயரைத் தீர்த்த பின்புதான் இன்பத்திலே ஈடுபடும் என்ற நம்பிக்கையில், "வண்டே! நீ இருக்கும் இடம் தேன் மதுரப் பொழில், உண்ணும் உணவோ மலர்ந்த பூக்களில் உள்ள தேன், நீ உன் இணையின் வாயில் கொடுக்க இருவரும் இன்பம் துய்க்கின்றீர்கள். ஆனால் உனக்கு இனிதாக இருக்கும் பூ எனக்குத் தீயில் நுழைவது போலவும், மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாகவும் உள்ளன. நானோ என் மாண்பை இழந்து பசலை படிந்துள்ளேன்.

நீ சிறியையாய் இருப்பதால் எம்பெருமான் முடி மாலையிலோ, தோள்மாலையிலோ இருந்து பேசலாம். நீ என் துயரைத் தீர்ப்பாய் என்றுதான் உன்னைத் தேர்ந்தெடுத்தேன். உன் ஆறு கால்களையும் தலையில் வைத்துக் கொள்கிறேன். உன்னைத் தொழுதல் எனக்கு உரிய செய்கையே. ஆதலால், அவன் பகுக்களோடு கூடி இருக்கும்போது மனநிறைவோடு இருப்பான். "புனல் அரங்கமன்றோ" எனின் தான் போகவேண்டிய இடத்திற்கு நேராகப் போகாமல் திருவழுந்தூரில் எழுந்தருளியிருப்பான். அவனிடத்தில் நான் உன் மனைவி பக்கத்தில் இருந்து வந்தவன் என்று கூறு. நீ என் பெயரைக் கூறாது உலகியல் வாழ்க்கையில் வாழ்பவர்களோடும், முக்தர்களோடும், மோட்சத்தை விரும்பி இவ்உலகில் முயலும் சான்றோரோடும் சேராது உன்னை விரும்பித் துயரக் கடலில் ஆழ்ந்திருக்கிறாள் என்று சிறிது சொல் போதும். நீ இதனைச் சொல்லப்போகும் அளவிலேயே நான் காணப்பெறாத எம்பெருமான் வடிவழகை நீ காணப் போகிறாய்" என்கிறாள்.

**நாரையைத் தூதாக அனுப்புதல்**

பெருமான் பிராட்டியைத் தேடுவதற்கு வானர வீரர்கள் பலரை ஏவினாற்போல் இவளும் கண்டவற்றை எல்லாம் ஏவுகிறாள். இராமாவதாரத்தில் குரங்கினம் சிறப்பு எய்தியது போல ஆழ்வார்கள் அவதாரங்களின்பின் பறவைகள் சிறப்படைந்தன.

வண்டைத் தூது விட்டு மறுமாற்றம் பெறும் வரையில் ஆற்றல் இல்லாத தலைவி நாரையைத் தூதாக அனுப்புகிறாள்.

கலவி நிலையில் தன் கால்களை அவன் கொண்டாடியதைக் கண்டபடியால் நாரையின் ஏனைய உறுப்புகளை விடுத்து அதன் கால்களைக் கொண்டாடுகிறாள். 'உன்னுடைய கால்களின் அழகும், செந்நிறமும் என் காதலனுடைய கால்களைப் போல் உள்ளன. நீ நான் சொல்வதை இன்றே செய். நாளைவரை உயிருடன் இருப்பேன் என்பது ஐயம்.

தலைவனுடைய பிரிவின் ஒவ்வொரு கணமும் என்னை நீரில் இருந்து பிரிந்த மீனைப்போலப் பதைக்கச் செய்கிறது. திருவழுந்தூருக்குச் சென்றவன் திருக்கண்ணபுரம் சென்றிருப்பான். என்னோடு கூடிப்பிரிந்த பின்னும் என் உயிர் உடலைவிட்டு நீங்காதபடி எனக்குத் துணையாக இருந்தான். கண்ணழகைக் காட்டி என்னை அடிமையாகக் கொண்ட தலைவனிடம் என் காதல் நிலையையும், பிரிவாற்றாமையால் வருந்தும் நிலையையும் கூறினால் எம்பெருமான் தவறாது என்னிடம் வருவான். இதைவிட இன்பம் வேறு எனக்கெதுவும் இல்லை.

ஆதலால், தூது செல்லும் உனக்கு உடைமையாய் இந்தக் கடற்கரைச் சோலையை வழங்குகிறேன். கடலில்நீர் குறையாமல் இருப்பதால் மீன்கள் ஆனைக்கன்று போலிருக்கும் அவற்றைத் தடுப்பார் இல்லாமல் நீயே கவர்ந்து கொள்ளலாம். நான் கொடுக்கும் இச்சிறிய கையுறையை ஏற்று என் முன்னிலையில் உன் காதலியோடு நீ உண்ணலாம். இங்கேயே தங்கலாம். எல்லையற்ற துயரத்திற்கு இருப்பிடமான உலகிலே பேரின்பம் எய்தலாம். எனவே உடையவர் கொடுப்பதும், இல்லவர் பெறுவதும் இந்த உலகத்திற்கு உள்ள ஏற்றமாகும்'.

## தலைவி தன் முடிவை உரைத்தல்

தூது அனுப்பிய பின்னும் தலைவன் வந்து சேராமையால் தலைவி தலைவன்பால் ஊடல் கொண்டாள். அத்தகைய ஆற்றாமை

நிலை ஏற்படக் காதல் கைமிகுதலால் கலக்கம் நீங்கிச் சற்று மனத்தெளிவு பெற்றுத் தூது விட்டதை நினைத்து, பல சுப நிமித்தங்கள் காண்கிறாள்.

இப்பாசுரத்தில் தலைவி தன் துயரைத் தோழியிடம் வெளிப்படுத்துகிறாள். எம்பெருமான் தன்னை வந்து காணுவான். அப்படி வந்தால் அவனுக்கு முகம் காட்டாமல் இருப்பதே சிறந்தவழி என்று தலைவி கூறத் தோழி அவளைச் சமாதானம் செய்து, 'தலைவனின் மேன்மையைக் கூறி அவளைக் கோபித்துக் கொள்வதற்கு நாம் யார்?' என்று கேட்கிறாள்.

தலைவி தோழி கூறியதனை மனங்கொள்ளாது மறுத்துக் கூற்று நிகழ்த்தும் இதனைக் "கூறிய வாயில் கொள்ளாக் காலை" என்பர் தொல்காப்பியர்.

எனவே, தலைவி 'தலைவன் செயலெல்லாம் வீண் பகட்டு, பிராட்டி ஒருத்திக்காக ஓர் ஊரை அழித்து ஊர் மக்களையே சிதைத்தவன். தீயவரை அழித்தவன், மலைபோன்ற கம்பீரமான வடிவை உடைய எனக்கினிய இறைவன், பயலை பூத்த என் உடம்பிலே அவன் புறம் போகாதபடி பிணைத்துக் கொண்டு முகங்காட்டாமல் நான்படும் துயரெல்லாம் அவன் முன்னிலையிலே வெளிப்படுத்துவேன். அவன் பாராட்டப்பட்ட என் உறுப்புகள் எல்லாம் மகிழ்வடையும்படியாக அவன் முன்னிலையிலே உயிரை விடுத்து அமைதியுறுவேன்' என்று தோழிக்குக் கூறுகிறாள்.

## எம்பெருமான் இரக்கத்தை வேண்டுதல்

முதல் பத்துப் பாசுரங்கள் தம் தனிப்பண்பு, எம்பெருமான் தனிப்பண்புகளைக் கூறித் தம் தனிப் பண்புகளுக்கு ஏற்ப, அடைய வேண்டிய பொருளை உறுதி செய்து அடைவதற்குரிய வழியை வரையறுக்க இவ்வளவுக்கும் அடிப்படைச் சொல்லாகிய திருமந்திரத்தை ஒலித்து இப்பொருள்களை நெஞ்சுக்கு அறிவுறுத்தித் தெளிவோடு வாழ்நாள் கழித்தாள்.

இரண்டாவது, இப்பாசுரத்தில் வாழ்நாளைக் கழிப்பதற்காக எண்ணிய அளவிலே எடுபடாமல் மயக்கம் மேலிட்டுக் கண்ணாலே எம்பெருமானைக் கண்டு நுகர வேண்டும் என்ற ஆற்றாமை தோன்றத் தான் நினைத்தவாறு நுகரப் பெறாமையால் இயல்புமாறிப் பிறர் வாயாலே தன் நிலையை எடுத்துக் கூற வேண்டும்படியான மயக்கநிலையிலே இருந்தாள்.

மூன்றாவதான இவள் நிலை கண்ட தோழி இவள் அயர்ச்சியைப் போக்க வேண்டும் என்று எம்பெருமானோடு பண்டு இவள் கூடிய நிலைபற்றி வினவத் தன் பழைய செய்திகளைக் கூறுகிறாள்.

பின்னர் தோழி வினவுதலும், தான் விடையிறுத்தலும் நிகழாமையால் தூதுவிட்டாள். பிறகும் வந்து காட்சி வழங்காமையால் ஊடல் கொண்டாள்.

'நப்பின்னையுடைய நற்குடிப் பிறப்புக்கு ஏற்ற குலத்திலே பிறந்தாலல்லாமல் இவளை மணக்க இயலாது என்று பார்த்து நந்த கோபனுக்குப் பிள்ளையாய் வந்து சேர்ந்து, ஒரு நாட்டிலுள்ள பகைவர்களை அடியோடு அழித்து அந்நாட்டை அனுபவிப்பது போல ஏழு காளைகளை வென்று நப்பின்னைக்குக் காட்சி வழங்கியதுபோல் எனக்கு வழங்க வேண்டாவா!

தேர்களுக்கு அளிப்பதற்காக அமுதம் பெற அலைகளைக் கடைந்து, அரக்கர் குலத்தை அடியோடு அழித்து, இடையர்களையும் பசுக்களையும் பெருமழையில் இருந்து காப்பாற்றக் குன்றெடுத்தாய். அவதாரத்திற் பிற்பட்டவர்களுக்குத் தன்னைக் கண்டு பயன்பெறும் வாய்ப்பினை வழங்கத் திருவின்நகரத்தில் நின்றும், திருக்குடந்தையில் கிடந்தும், அடியவரிடத்தில் மையல் உடையன் என்று கூறுமாறு எல்லோர்க்கும் எளியவனாய் இருப்பவன் எனக்கு எட்டாப் பூவாகி விட்டாயே'.

'எம்பெருமான் தொடக்கத்தில் காரணம் பற்றாமல் எனக்கு அருளியது ஓர் அருள் உண்டு. அஃது ஆன்மா உள்ளவரை இருக்க

வேண்டும். இயற்கைப் புணர்ச்சியில் எம்பெருமான் யான் பெற்ற பேறு ஆன்மா உள்ளவரை என்னை விட்டு அகலாது இருக்க வேண்டும் என்று நினைத்திருந்தேன் அதற்கு ஊறு நிகழ்கின்றதே'.

**காட்சி பெறுதல்**

ஆழ்வாருடைய துயரக் குரல் கேட்டுக் கார்மேகத்தை ஒத்த இறைவன் முகம் காட்டியபடி இறுதிப் பாடல் சொல்கிறது. கண்ணால் பார்த்தவரைப் போல ஆழ்வாராகிய நாயகி பேசுதலால் எம்பெருமான் காட்சி வழங்கிய செய்தி புலப்படுகிறது. 'நான் கண்டு கொண்டேன்' என்று வடிவில் தொடங்கி "மின்னுமாமழை தவழும் மேகவண்ணா"[50] என்று முடிக்கிறார்.

'அடியேன் உன்னை எப்பொழுதும் கண்டு கொண்டிருக்கும் படியாக அருள்செய்ய வேண்டும்' என்ற ஆழ்வார் வேண்டுகோள் நிறைவேறுகிறது. எம்பெருமான் நுகர்ச்சிக்கு அவன் இரக்கமே உபாயம். உலகத்துக்குக் கண்ணாக வேதங்களை வெளிப்படுத்திய பெருமானைத் தம் உள்ளத்து அனுபவமாகிய இத்தமிழ் மாலையைச் சூட்டி மனநிறைவு கொள்கிறார்.

# பெரிய திருமொழியும் திருநெடுந்தாண்டகமும்

இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட ஆழ்வார் "வாடினேன் வாடி வருந்தினேன்"[51] என்ற பாசுரத்தைப் பாடினார். இப்பாசுரம் பெரிய திருமொழியில் முதற்பத்தில் முதல் பாசுரமாக அமைகிறது. பெரிய திருமொழியில் மொத்தப் பாசுரங்கள் 1084. இதில் மொத்தம் 11 பத்துக்கள் உள்ளன. ஒவ்வொரு பத்துக்கும் 10 திருமொழிகள் வீதம் அமைந்துள்ளன. ஒவ்வொரு திருமொழியும் பத்துப் பத்துப் பாசுரங்களைக் கொண்டது. இதில் 11–ஆம் பத்தில் எட்டுத் திருமொழிகளே உள்ளன. அதேபோல் பத்தாம் பத்தில் ஏழாம் திருமொழியில் மொத்தம் பத்துப் பாசுரங்களுக்குப் பதில் பதினான்கு பாசுரங்கள் இடம் பெற்றுள்ளன.

ஒவ்வொரு திருமொழிக்கும் முதல் பாசுரத்தின் முதல் அடியில் உள்ள முதல் சீரே தலைப்பாக உள்ளது. இத்திருமொழியில் தாமான தன்மையில் பாடிய பாசுரங்களும், அகத்துறைப் பாசுரங்களும் அமைந்துள்ளன.

இத்திருமொழியைத் தாண்டகத்தோடு ஒப்புநோக்கும்போது பாசுர அமைப்பில் சில மாற்றங்களும் காணப்படுகின்றன. திருநெடுந்தாண்டகத்தில் தாய்ப் பாசுரமாகப் "பத்து" பாசுரங்களை ஆழ்வார் பாடியுள்ளார். பெரிய திருமொழியில் 8 திருமொழிகள் தாய்ப்பாசுரமாக அமைத்துள்ளார். அவை பின்வருமாறு தரப்படுகின்றன.

(2.7) திவளும் வெண்மதி போல்

(3.6) தூவிரிய மலருழக்கி

(4.8) கவளயானை கொம்பொசித்து

(5.5) வெருவாதாள்

(8.1) சிலையிங்கு பொன்னாழி
(8.2) தெள்ளியீர்
(9.9) மூவரில் முன் முதல்வன்
(10.9) புள்ளுருவாகி

என்பனவாம்.

தலைவியின் நிலையைக் கண்டு தாய் இரங்கிக் கூறும் பாசுரமான (2.7), (3.6), (4.8), (5.5), (9.9), (10.9) என்ற ஆறு திருமொழிகள் உள்ளன. (8.1) தலைமகனிடத்து ஈடுபட்ட தலைமகளது செயல்கண்டு தாய் வியந்து கூறுவதாகவும், (8.2) தலைமகனை இயற்பழித்துத் தலைவியின் நிலைக்குத் தாய் இரங்கிக் கூறுவதாகவும் பாசுரங்கள் அமைந்துள்ளன. மேலும் திருவிடந்தை, திருஆலி, பார்த்தன்பள்ளி, திருவரங்கம், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ் சோலை போன்ற திவ்யதேசங்களையும் அங்கே வீற்றிருக்கின்ற இறைவனைப் பற்றியும் இத்திருமொழிகளில் பாடுகின்றார்.

**சான்றாக,**

பெருமானிடத்தில் என்மகள் துளம்படு முறுவல் தோழியர்க்கு அருளாள், துணைமுலை சாந்து கொண்டணியாள், குளம்படுகுவளைக் கண்ணினை எழுதாள், கோல நன் மலர் குழற்கு அணியாள், சாந்தமும் பூணும் சந்தனக் குழம்பும் தடமுலைக்கு அணியலும் தழலாம், வெண் திங்கட் கதிர் சுட மெலியும் தென்றலும் தீயினில் கொடிதாம், ஓதிலும் உன் பேரன்றி மற்று ஓதாள் உருகும் நின் திரு உரு நினைந்து காதன்மை பெரிது கையறவுடையள். தன் குடிக்கு ஏதும் தக்கவா நினையாள். இளங்கனி இவளுக்கு என்ன நினைத்திருந்தாய் இடவெந்தை பிரானே என்று செவிலி முறையிடும் கூற்றில், "இன்பத்தை வெறுத்தல்", "துன்பத்துப் புலம்பல்", "உண்டியிற் குறைதல்", "உடம்பு நனிசுருங்கல்", "பசியட நிற்றல்", "பயலைப் பாய்தல்" முதலிய மெய்பாடுகள் புலப்படுகின்றன. இதே கருத்துக்களை அமைத்தே திருநெடுந்தாண்டகப் பாசுரங்கள் அமைந்துள்ளன.

**“பட்டுக்கும் அயர்த்திரங்கும் பாவை பேணாள்**
**பனி நெடுங்கண்ணீர் ததும்பப் பள்ளி சொன்னாள்”[52]**

என்ற பாசுரமும்,

**“நெஞ்சுருகிக் கண்பனிப்ப நிற்கும் சோரும்”[53]**

என்ற பாசுரமும்,

**“தன் நிறையழிந்தாள் ஆவிக்கின்றாள்”[54]**

என்ற பாசுரமும் சான்றாக அமைந்துள்ளன.

திரு ஆலியைப்பாடும் பாசுரத்தில் திருவாலி அம்மானோடு உடன்போக்கிற் சென்று தலைவியின் நிலைகண்டு தாய் இரங்குவதாகப் பாசுரம் உள்ளது. ஆனால் உடன் போக்குத் துறையில் திருநெடுந்தாண்டகத்தில் பாசுரங்கள் இல்லை. திருநெடுந் தாண்டகத்தைப் போலவே பெரியதிருவாய்மொழியில் தோழிப் பாசுரம் இல்லை.

**தலைவி கூற்று**

பெரியதிருமொழியில் தலைவி கூற்றாக மொத்தம் பதினான்கு திருமொழிகள் உள்ளன. இத்திருமொழிகளில் இறைவன் வாழும் உறைவிடமாகிய அட்டபுயகரம், திருவாலி, திருவழுந்தூர், திருக்கண்ணபுரம், திருநாகை, திருப்புல்லாணி, திருக்குறுங்குடி போன்ற தலங்களையும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இப்பாசுரங்களில் சொல்லப்பட்ட கருத்துக்கள் திருநெடுந்தாண்டகத்திலும் அமைந்துள்ளன. அறத்தொடு நிலை என்ற துறையில் ஐந்து பாடல்களாகத் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்கும் திறத்தைப் போல இங்கு இத்துறையில் (8.3) “கரையெடுத்த சுரி சங்கும்” (கண்ணபுரப் பெருமாள்) (11.3) “மின்னிலங்கு” என்ற இரண்டு திருமொழிகள் இத்துறையைச் சேர்ந்தன.

**“உள்ளூறும் சிந்தைநோய் எனக்கே தந்துஎன்**
**ஒளிவளையும் மாநிறமும் கொண்டார்”[55]**

என்று திருநெடுந்தாண்டகத்தில் வேட்கை மிகுந்த காமத்தால் அவன்

பிரிந்தபோது என் உள்ளத்தில் பரவி இருக்கின்ற நோயைத் தந்து போனான் என்ற கருத்தினைப் போலவே திருமொழியில் (8.3) கண்ணபுரப் பதிகத்தில் தலைமகனைப் பிரிந்த தலைவி கிருஷ்ணாவதாரச் செய்திகளைப் பலபடியாகப் பேசி அத்தலைவனின் பேரழகில், "என்வரிவளை, கனவளை, செறிவளை, பொன்வளை, ஒலிவளை, பெய்வளை"[56] இழந்தேனே என்று வருந்துகிறாள்.

திருநெடுந்தாண்டகத்தில் தூது பாசுரமாக வண்டு நாரை இவற்றைத் தூதாகத் தலைவனிடம் அனுப்பித் தன் நிலையைக் கூறி வருமாறு செய்வதைப் போலப் பெரிய திருமொழியில் தூது பாசுரங்கள் காணப்படுகின்றன. (3 – 6) "தூவிரிய" என்ற திருமொழி.

திருநெடுந்தாண்டகத்தில் தலைவி வண்டை நோக்கிப் "பூமருவி இனிதமர்ந்து பொறியிலார்ந்த அறுகால வண்டே"[57] என விளித்துத் திருவழுந்தூரில் வீற்றிருக்கும் எம்பெருமானிடம் என் மனநிலையைக் கூறி, அவன் பிரிவால் வருந்தும் என் வருத்தத்தைக் கூறுவாயாக என்று தூது அனுப்புவது போலப் பெரிய திருமொழியில் (3.6) திருவாலியில் வீற்றிருக்கும் வயலாலி மணவாளப் பெருமானிடத்தில் வண்டைத் தூதாக அனுப்ப முற்பட்டு வண்டை நோக்கி, நறுமலர் மிகுந்த நீலமலர்கள் கிழியும்படி அம்மலரில் அமர்ந்து தேனைப் பருகும் அறுகால் வண்டே நீ வயலாலிப் பெருமானிடம் உன்பிரிவால் அவள் உடலில் பசலைநோய் உற்றது என்பதைக் கூறுவாயாக என்கிறாள் தலைவி.

தூது விட்டனுப்பிய பின்னும் தலைவன் வாராமையால் கலக்கமுற்ற தலைவி தலைவன்பால் ஊடல் கொண்டாள். அத்தகைய ஊடல் பாசுரம் தாண்டகத்தில் ஒரே ஒரு பாசுரம் மட்டுமே உள்ளது. ஆனால் பெரிய திருமொழியில் (10.8) "காதில் கடிப்பிட்டுக் கலிங்க முடுத்து" என்ற பத்து பாசுரம் கிருஷ்ணாவதாரத்தில் கண்ணபிரானோடு ஆயர் மகளிர் சுணையாலே (ரோஷத்தாலே) ஊடல் கொண்ட செய்தியைக் குறிப்பிடுகின்றன.

திருநெடுந்தாண்டகத்தில் தலைவியானவள் தூது விட்டதை நினைத்தும், சுபநிமித்தங்கள் கண்டும், தலைவன் வந்துவிட்டால் அவனெதிரே தன் வருத்தத்தைத் தெரிவிக்க முற்பட்டாள்.

பெரியதிருவாய்மொழியில் கண்ணபிரான் ஓர் ஆயர் மங்கையுடன் புணர்ந்து பிரிகின்றான். தான் விரும்பி வரும் காலத்தையும் சொல்லி விடுகின்றான். குறிப்பிட்ட சமயத்தில் அவனால் அங்கு வரமுடியாமல் வேறு ஒரு ஆய்ச்சியிடம் பொழுது போக்கிவிட்டுத் திரும்பிவந்த கண்ணனை ஆய்ச்சி வரவேற்காமல் கோபம் கொண்டு உங்களுக்குப் பல தேவிமார் இருக்க இங்கு என்ன வேலை? என்று ஊடல் கொள்ள அத்தகைய ஊடல் கொள்ளும் ஆய மகள் போலத் தன்னை நினைத்துப் பரகால நாயகி பேசுகிறாள்.

## அடிக்குறிப்புகள்

1) எம். நாராயண வேலுப்பிள்ளை, பிரபந்தக் காட்சிகள் ப. 124.
2) ச.வே. சுப்பிரமணியன், தமிழிலக்கிய வகையும் வடிவமும் ப. 71
3) குறுந். பா. எ – 137.
4) நற்றிணை பா. எ – 166.
5) தொல் (இளம்) ப. 3.
6) மது ச. விமலானந்தம் தமிழ் இலக்கியவரலாற்றுக் களஞ்சியம் ப.90
7) சரளாராஜகோபாலன், சங்க இலக்கியம் பக். 12
8) புறம், பா.எ. 31.
9) தொல் (பொருளியல்) நூ.எ. 27.
10) தொல் (களவு) நூ. எ. 1.
11) குறள் எ. 1101.
12) மேலது எ. 173.
13) தொல் (புறம்) நூ.எ.23.
14) மூன்றாம் திருவந்தாதி பாசு. எ. 69.
15) நான்முகன் திருவந்தாதி பாசு. எ. 39.

16) கம்ப (ஆரண்ய) கரன்வதைப் படலம் பா. எ. 188.
17) ஸ்ரீவசன பூஷணம் சூ.எ. 36.
18) மேலது – சூ. எ. 42.
19) ஆசாரிய ஹிருதயம் சூ. எ. 118.
20) தி.நெ.தா. பாசு. எ. (1 முதல் 10)
21) ஆசாரிய ஹிருதயம் சூ. 133.
22) தொல் (களவு) நூ.எ. 24.
23) மேலது நூ.எ. 27.
24) தி.நெ. தா. பாசு. எ. 11.
25) தொல் (களவு) நூ. எ. 8.
26) மேலது (மெய்) நூ. எ. 22.
27) குறள் எ. 1199
28) மேலது எ. 1213.
29) தொல் (மெய்) நூ.எ. 7.
30) மேலது (பொருளியல்) நூ.எ.8.
31) தொல் (மெய்) ப. 368
32) ந. சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கை பக். 155–156.
33) தொல் (களவு) நூ.எ. 22.
34) மேலது நூ.எ. 16.
35) ந. சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கை ப. 156.
36) ந.அ.பொருள், நூ.எ.47.
37) மேலது நூ.எ.49.
38) தொல் (களவு) நூ.எ. 20.
39) மேலது நூ.எ. 20.
40) மேலது நூ. எ. 34.
41) மேலது நூ.எ. 5.
42) குறள் எ. 1092.
43) தொல் (பொருளியல்) நூ.எ. 13.
44) தி.நெ.தா. பாசு. எ. 23.
45) குறுந் பா. எ. 106.
46) குறள் எ. 1206.

47) தொல் (பொருளியல்) நூ.எ. 2.
48) சண்முகம்பிள்ளை, சிற்றிலக்கியவகைகள் ப. 56.
49) தொல் (செய்யுளியல்) நூ.எ.175.
50) தி.நெ.தா. பாசு. எ. 30.
51) பெ. தி.மொ. பாசு. எ. (1ப 1தி 1பாசு)
52) தி.நெ.தா. பாசு. எ. 11 – 1, 2 வது வரி.
53) மேலது பாசு. எ. 12 – 1 வது வரி
54) மேலது பாசு.எ. 19 – 3 வது வரி
55) மேலது பாசு. எ. 23 – 1, 2 வது வரி
56) பெ. தி.மொ. பாசு. எ. 8ப 3தி (1–10பாசு)
57) தி.நெ.தா. பாசு.எ. 26 – 3வது வரி.

# திருநெடுந்தாண்டக அடிப்படையில் நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும்

**ஆ**ழ்வார்களுக்கெல்லாம் நடுநாயகமாகத் திகழ்பவர் நம்மாழ்வார். இவர்க்குப் பராங்குசர் என்ற பெயரும் உண்டு. ஒருவனுக்கு ஞானம் பிறந்தாலும் பணிவு என்பது இல்லையெனில் பயனில்லை. கர்வம் என்பது இல்லையெனில் பகவானுடைய அடியார்களை வணங்குவான். இப்பணிவை ஞானிகளுடைய உபதேச மொழிகளால்தான் உண்டாக்க முடியும் எனக்கருதி அதனைச் செய்தவர் நம்மாழ்வார்.

## நம்மாழ்வாரின் தோற்றம்

நம்மாழ்வார் தென்பாண்டி நாட்டில் பொருநை நதிக்கரையில் திருக்குருகூரில் அவதரித்தார். இவர் பெற்றோர் காரியார் உடைய நங்கையார் ஆவர். நீண்ட நாள் மகப்பேறு இல்லாததால் திருக்குறுங்குடிப் பெருமான் "நம்பி" அருளால் ஓர் ஆண்குழந்தை பிறக்க, அக்குழவி பிறந்தபொழுது, உலகத்தவரைப் பிணிக்கும் "சடம்" எனும் வாயுவைக் கோபித்து விரட்டித் தன் யோகத்தை நிலைநிறுத்தியதால் "சடகோபன்" என்னும் பெயர் பெற்றது என்று குருபரம்பரை கூறுகிறது. இதனை,

**"வளவயல் சூழ் வண் குருகூர்ச் சடகோபன் வாய்ந்துரைத்த"** [1]

என்ற பாசுர அடிகளால் அறியலாம்.

உலகக் குழந்தையைப் போல் பசி அழுகை தாகம் என்று எதுவும் இல்லாமல் இருக்கப் பெற்றோர் ஆழ்வார் திருநகரி என வழங்கும் திருக்குருகூர் இறைவன்சந்நிதியின்முன் அக்குழந்தையைக் கிடத்திப் பகவானை வேண்டக் குழந்தை தவழ்ந்து சென்று அங்குப் புளிய மரத்தின்கீழ் அமர்ந்தது. அச்சடகோபர் பதினாறு ஆண்டுகள் யோக நிலையில் இருந்தார்.

வடநாட்டு யாத்திரை செய்து மீண்டும் குருகூர்ப்பக்கம் வந்த மதுரகவியாழ்வார் இந்த அதிசயச் செய்தியைக் கேள்வியுற்று உடனே ஒரு சிறு கல்லால் ஒலியை உண்டாக்கிச் சடகோபரை நோக்கிச் "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று கேட்க, "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று சடகோபர் பதில் கூறினார்.

அன்று முதல் மதுரகவியார் ஸ்ரீசடகோபரைத் தம் ஆசாரியராகக் கொண்டு வழிபடலானார். எம்பெருமான் கிருபையால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார் அன்று தொடங்கி அவன் அருளை வியந்தவாறு பல பாசுரங்களை அருளிச் செய்தார். இவர் அருளிய நூல்கள் நான்கு. அவையாவன, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்பன.

**திருவாய்மொழி அமைப்பு**

திருவாய்மொழி என்பது அந்தாதித் தொடையால் அமைந்த நூறு திருவாய்மொழிகளின் தொகுப்பாகும். ஒவ்வொரு திருவாய் மொழியிலும் பதினான்கு பாசுரங்கள் உள்ளன. "கேசவன் தமர்" என்ற திருவாய்மொழியில் மட்டும் பதின்மூன்று பாசுரங்கள் உள்ளன. பத்துத் திருவாய்மொழி சேர்ந்தது ஒரு பத்து. இப்பிரபந்தம் முழுவதும் பத்துப் பத்தாக அமைந்துள்ளது. ஒரு திருவாய்மொழிக்குப் பதினொரு பாசுரங்கள் வீதம் நூறு திருவாய்மொழிக்கு 1100 பாசுரங்கள் உள்ளன. ஒரு திருவாய்மொழியில் மட்டும் இரண்டு பாசுரங்கள் மிகுதியாக இருப்பதால் இப்பிரபந்தத்தில் உள்ள பாசுரங்களின் கூடுதல் 1102 ஆகும்.

திருவாய்மொழியில் இறைநிலை, ஆன்மநிலை, இறைவனை ஆன்மா அடையும்வழி, அதன் வழியில் ஏற்படும் தடை, முடிவில் அடையும் உறுதிப்பொருள் ஆகிய ஐந்தும் விரிவாக விளக்கப் பட்டுள்ளன. இறை அநுபவத்தைப் பாடும் பாசுரங்கள் தாமான தன்மையிலும் இறைவனின் அழகில் ஈடுபட்டுப் பேசுகின்ற பாசுரங்கள் பெண் பேச்சிலும் உள்ளன. அவை, தலைவி, தோழி, தாய் ஆகிய மூன்று வகையாகும்.

## திருமங்கை மன்னனும் நம்மாழ்வாரும்

நம்மாழ்வார் அருளிய நான்கு நூல்களும் வேதங்களோடு ஒக்கும். திருமங்கை மன்னன் அருளிய ஆறு நூலும் நம்மாழ்வார் அருளிய வேதங்களுக்கு அங்கங்களாக விளங்கும். திருவிருத்தத்தில்; "பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும்"2 என்று விரோதியாய் வந்தேறிய குற்றங்களை நம்மாழ்வார் கூறிக் கொண்டாற்போன்று "வாடினேன் வருந்தினேன் மனத்தால் பெருந்துயரிடும்பையில் பிறந்து"[3] என்று குற்றங்களைக் கூறிக் கொள்கிறார் திருமங்கையாழ்வார்.

இவருக்கும் பெயரில் ஓர் ஒற்றுமை காணப்படுகிறது. திருமங்கையாழ்வாருக்குப்"பரகாலன்"என்றும் நம்மாழ்வாருக்குப் "பராங்குசன்" என்றும் பெயர் உண்டு. பரகாலன் என்பது பகைவர்களுக்குக் காலன் போன்றவர் என்பது பொருள். பராங்குசர் என்பதற்குப் பகைவரான யானைகளுக்கு அங்குசம் போல்வர் என்பது பொருள். ஆசார்யஹ்ருதயத்தில் "மதவலிப்பதற்கு அங்குசமிட்டு"[4] என்பதால் மதங்கொண்ட யானையைப் போலக் குடிப்பிறப்பு, கல்வி, செல்வம் என்ற மும்மதங்களால் செருக்கித் திரிபவர்களுக்கு மதம் அடக்கித் தலை வணங்கு உபதேசரூப அங்குசமிட்டு என்பது வ்யாக்யானம். எனவே இருவருக்கும் இப்பெயர் பொருந்தும்.

திருநெடுந்தாண்டகத்தில் உள்ள பாசுரங்கள் முப்பது. இவற்றில் தாய்ப்பாசுரங்கள் பத்து. தலைவி பாசுரங்கள் பத்து. தலைவி பாசுரங்களில் ஐந்து அறத்தொடு நிலை, இரண்டு பாசுரங்கள் தூது, ஒரு பாசுரம் ஊடலாகும். திருவாய்மொழியில் தாய் கூற்றுள்ள பாசுரங்கள் ஏழு திருவாய்மொழி, தலைவிகூற்றுள்ள பாசுரங்கள் பதினேழு திருவாய்மொழி. இவற்றில் நான்கு திருவாய்மொழி தூதுபாசுரம், தோழி கூற்றாக மூன்று திருவாய்மொழிகள். திருநெடுந்தாண்டகத்தில் தோழி கூற்று இல்லை.

"ஆசார்யஹ்ருதயம் மூன்று காலத்தையும் அறியும் அறிவின் நிலையாகிய பிரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி, தாய், மகள் என்று

பெயர் கூறுகிறது."[5] இதேபோல் நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் கூறப்பட்ட "தாய், தலைவி, தோழி என்பவர்களுக்கு எவ்விடத்தில் கூற்று நிகழும் என்பதை (நூற்பா.134.) கூறுகிறது."[6] அவற்றின் கருத்துப் பின்வருமாறு;

தோழி: கட்டுவிச்சியின் சொல்லைக்கேட்டு தலைவி இறைவனோடு புணர்ந்து, பிரிந்து ஆற்றாமை மிக்கிருக்கும் காரணத்தை உணராது அவளின் மெலிவு சிறு தெய்வத்தால் ஏற்பட்டது என்று வெறியாட்டு நிகழ்த்த விரும்பிய தாய்க்கு உண்மையைக் கூறி வெறி விலக்குமிடத்தும்,

தலைவியின் விருப்பத்தை மாற்ற முயன்ற தாயிடம் அதனை விலக்கி இவள் உயிருக்கு ஊறு நேருமாதலின் அவளை எம்பெருமானிடம் சேர்த்துவிட வேண்டும் என்று கூறுமிடத்தும்,

தலைவியின் சுயம்வரத்துக்கு ஏற்பாடு செய்த அளவில் இவளை எம்பெருமானுக்கே மணமுடிக்கவேண்டும் என்று அறத்தொடு நிற்றலின் கண்ணும் தோழியின் கூற்று நிகழும். இதனை ஆசார்ய ஹிருதயம் "அநந்யார்ஹத்வம்" என்று கூறுகிறது. இத்தகைய தோழியின் கூற்று அமைப்பில் திருநெடுந்தாண்டகத்தில் பாசுரங்களே இல்லை. தோழியைத் தாய் வினவுவது போலவும் தலைவி தோழியிடம் தன்நிலையைக் கூறுவதுபோலவும் இப்பாசுரங்கள் படைக்கப் பட்டுள்ளன.

செவிலி கூற்றாக அமைந்த ஏழு திருவாய்மொழிகளில் கூற்று நிகழும் இடங்கள் பின்வருமாறு;

அ) எம்பெருமானிடம் தாய் தலைவியின் நிலையை எடுத்துக் கூறலும்,

ஆ) ஆசைப்பட்டு மெலிந்து தலைவி வருந்தும் நிலை கூறலும்,

இ) பித்து ஏறி ஒப்புமையுடைய பொருளைஎம்பெருமானாகவே நினைத்துத் தலைவி பேசுதலைக் கூறலும்,

ஈ) தலைவி ஆற்றாமையாலே போலச் செய்தலை இறைவனுடைய ஆவேசம் என்று கருதிக் கூறலும்,

உ) இறைவனைப் பிரிந்த பிரிவினாலே அடக்கத்தை இழந்து தலைவி இருக்கிறாள் என்று கூறும் இடத்தும்,

ஊ) என் பெண் எனக்கு உதவாது எம்பெருமான் நினைவாகவே இருக்கிறாளே என்றவிடத்தும்,

எ) இறைவனை அணுகி அவன் முன்பு உயிரை விடவேண்டும் என்று தலைவி நினைக்கும் இடத்தும்,

தாய் கூற்று நிகழும்.

தலைவி கூற்றாக 17 திருவாய்மொழிகள் உள்ளன. அவற்றில் நான்கு தூது. அவை பின்வருமாறு,

"வாயும் திரையுகளும்" (2.1) கண்ணால் கண்ட பொருட்கள் யாவும் இறைவன் பிரிவால் வருந்துவனவாகக் கூறுகிறாள்.

"ஏறாளும் மிறையோனும்" (4.8) எம்பெருமான் விரும்பாதவற்றைத் தான் வெறுக்கிறாள்.

"மாசறுசோதி" (5.3) மடலெடுக்க முற்படுகிறாள். அப்போது இரவு வந்த அளவில் (5.4) மடலெடுக்க முடியாமல் காதல் நோய்மிக்கு வேறு வழி இல்லாமல் வருந்துகிறாள்.

"எங்ஙனேயோ"(5.5) எம்பெருமான் உருவிலே மயங்குகிறாள்.

"மானேய் நோக்கு நல்லீர்" (5.9) – ல் எம்பெருமானைக் கூடும் நாளை வேண்டுகிறாள்.

"மின்னிடை மடவார்கள்" (6.2) அவன் காலம் தாழ்த்தி வந்தமையால் ஊடுகிறாள்.

"வெள்ளைச் சுரிசங்கு" (7.3)–இல் மனத்தை அவனிடமிழந்து, உசாத்துணை இன்றி வருந்துகிறாள்.

"ஏழையராவி" (7.7) உருவெளிப்பாட்டாலே துன்புறுத்தும் பொருள்கள் ஒன்று சேர்ந்து தன்னை வருத்துவதைக் குறிப்பிடுகிறாள்.

"நங்கள் வரிவளை"(8.2) நலம் சொல்கின்ற தாய், தோழிமார்களை மீறுகிறாள்.

"இன்னுயிர்ச் சேவலும்" (9.5) போலியான பொருள்களைக் கண்டு உயிரை முடித்துக் கொள்ளத் துணிகிறாள்.

"அறுக்கும் வினையாயின" (9.8) தலைவி தலைவனது நகரான திருநாவாயிற் செல்ல நினைத்தமை கூறுகிறாள்.

"மல்லிகை கமழ் தென்றல்" (9.9) என்ற திருமொழியில் பசுமேய்க்கச் சென்ற கண்ணன் வாராமையாலே வருந்தியும், அவன் பிரிவினாலே பொருள்கள் நலிதலையும் குறிப்பிடுகிறாள்.

தலைவியால் "அஞ்சிறை மடநாராய்" (1.4) வியூகத்திலும், வைகல் பூங்கழிவாய்" (6.1) விபவத்திலும், "பொன்னுலகாளிரோ" (6.8) பரத்துவம், அந்தர்யாமித்வம் ஆகிய இரண்டிலும் "எம்கானல் அங்கழிவாய்" (9.7 அர்ச்சாவதாரத்திலும் தூது விடப்படுகின்றன.

பரகால நாயகி "தூவிரிய மலருழக்கி" என்ற திருமொழியில் வண்டையும், குருகையும் தூதுவிட்ட அளவிலே ஆற்றல் இழந்து இறைவனுடைய உருவத்தோற்றத்தைக் கண்டு அதிலே மூழ்கி யுள்ளதைக் காணலாம்.

தாய் கூற்றான ஏழினை "அத்யவசாயம்" (உபாயத்தில் உறுதி) என்றும், தலைவி நிலையைத் "த்வரை" (பேற்றில் பதட்ட நி லை ல ) என்று ஆசார்ய ஹிருதயம் கூறுகிறது.

மேற்சொல்லப்பட்ட தாய்கூற்றான ஏழு, பத்தும் தலைவி கூற்றான பதினேழு மற்றும் அகப்பொருள் பாடல்களாகும்.

## திருநெடுந்தாண்டகமும் திருவாய்மொழியும்

மூன்று கூற்றுக்களிடிப்படையில் இவ்விரண்டு பாசுரங்களையும் ஒப்பிட்டுக் காணலாம். இரண்டு பாசுரங்களிலும் தாய் மகளின் நிலையை எண்ணி ஆற்றாமையால் புலம்புவதைக் கண்டு இரங்கும் துறையில் இப்பாசுரங்கள் படைக்கப்பட்டுள்ளன. திருமங்கையாழ்வார்,

**"கல்லெடுத்துக் கல்மாரி காத்தாய் என்றும்"[7]**

என்ற தாய்க்கூற்றுப் பாசுரத்தில் தலைவி வளர்த்த கிளியை அவள் முன்பாக வைக்கக் கிளி தலைவி முன் தலைவனைப் பற்றிக் கூற நாணியது. தலைவி நான் எம்பெருமான் திருநாமத்தைச் சொல்லிய பின் நீ கூறலாம் என்று கிளியிடம் கூறித்தான் இன்னலில் வருந்துவதால் இன்னலைப் போக்கும் தலைவனான பெருமாள் இன்னலைத் தந்து விட்டாரே என்று புலம்புகிறாள். இதேபோன்ற பாசுரங்கள் திருவாய்மொழியிலும் உள்ளன.

பராங்குச நாயகியின் பேச்சு, நடத்தைகளை உற்றுக் கவனித்த தாய் கண்ணனே தன் பெண்ணுக்குள்ளே உள்ளான் என்று எண்ணியவளாய் வினவ வந்தவர்களை நோக்கிப் பேசுவதாய் அமைகிறது.

**"கடல் ஞாலம் செய்தேனும் யானேயென்னும்**
**கடல் ஞாலம் மாவேனும் யானே யென்னும்"[8]**

இப்பாசுரத்தில் கடலுள் கூடி உலகத்தைப் படைத்தவனும், உலகமாக இருப்பவனும், உலகை அளந்தவனும், பிரளயம் ஏற்பட்ட காலத்தில் பூமியை மேலே எடுத்துக் காப்பாற்றியவனும், உலகைக் காப்பதற்காக உண்டு வயிற்றில் வைத்துக் காப்பாற்றியவனும் நானே என்கிறாள். இவளுக்குள்ளே உலகைக் காத்து நிறுத்தும் எம்பெருமான் ஆவேசமாகி விட்டானோ என்று தோன்றுகிறது.

திருநெடுந்தாண்டகத்தில் "போராளனாயிரந் தோள் வாணன்மான"[9] என்ற பாடலில் ஆயிரம் தோள்களை உடைய வாணசூரனை மாளச் செய்த செய்தியைத் திருவாய்மொழியில் தாய் கூற்றுப் பாசுரத்தில்,

**"வாணன் ஆயிரந் தோள் துணித்தீர்: உம்மைக்**
**காண நீரிரிரக்கமில்லீரோ"[10]**

என்கிறார்.

**தலைவி கூற்று**

திருநெடுந்தாண்டகத்தில் 21 முதல் 30 வரையுள்ள பாசுரங்கள் இந்நிலையைச் சேர்ந்தன. "காட்சி தந்த பெருமான் என் உள்ளத்தைக்

கவர்வதற்காக "நைவளம்" என்ற பண்ணை இசைக்க நான் அவ்விசையில் மயங்க என் மனமும் கண்ணும் பெருமானின் திருவடியில் கிட்டின. என் கைவளையும், மேகலையும் கழல எனக்கு நான்கு கைகளோடு காட்சியளித்தான். அத்தகைய வயலாலிப் பெருமானிடம் மனத்தைப் பறிகொடுத்தேன் என்று கூறுகிறாள் தலைவி.[11]

இதே கருத்தை ஒட்டிப் பராங்குசநாயகி தம் திருவாய்மொழியில் ஏழாம் பத்தில் 3–ஆம் திருமொழியில் "என் நெஞ்சம் பகவானின் சிவந்த கனி போன்ற வாயழகில் ஈடுபடச், சிவந்த ஒளி கூடிய நீண்ட திருமுடிக்கும், சங்கு சக்கரம் ஏந்திய தாமரைக் கைகளுக்கும் கண்களுக்கும் என்னை அர்ப்பணித்து விட்டேன். என் மனத்தைக் கவர்ந்து தென்திருப்பேரையில் வீற்றிருக்கும் இறைவனுக்கே என் நெஞ்சம் ஈடுபட்டு நாணமும் நிறைவும் இழந்து விட்டது. இதனை,

"நங்கள் பிரானுக்கு என் நெஞ்சம் தோழீ
நாணும் நிறையுமிழ்ந்ததுவே"[12]

என்கிறார்.

## தூது

திருவாய்மொழியில் தூதினை நான்கு வகையாகக் கூறுகிறார். திருநெடுந்தாண்டகத்தில் வண்டு, நாரை போன்றவைகளைத் தூதாகத் தலைவனிடம் அனுப்பித் தன் நிலையை எடுத்துச் சொல்லுமாறு கூறுகிறாள். பராங்குச நாயகி நாரை, அன்னம், குயில், முகில், வரிவண்டு, கிளி, நாகணவாய்ப் பறவை, வாடைக்காற்று மனம் ஆகியவற்றைத் தலைவன் பால் தூதாக அனுப்புகிறாள்.

"செங்கால் மடநாராய் இன்றே சென்று திருக்கண்ணபுரத்தில் வீற்றிருக்கும் எம் தலைவனுக்கு என்நிலை உரை"[13] என்று நாரையைப் பரகால நாயகி தூதாக அனுப்பப், பராங்குசநாயகி நீ கருடக் கொடியானாகிய பகவானிடம் என் பொருட்டுத் தூதாகச் செல்வாயாக என்பதை, "வெஞ்சிறைப் புள்ளுயர்த்தார்க்கு என் விடு தூதாய்"[14] செல் என்கிறார்.

பரகாலநாயகி தலைவன்பால் வண்டு, நாரை இவற்றை தூதாக அனுப்பியும் தலைவன் முகங்காட்டாமையாலே ஊடல் கொண்டு, "தலைவன் தன் முன் வந்தால் அவன் முன்னரே என் ஆற்றாமையை வெளிப்படுத்தி அவனால் பாராட்டப்பட்ட என் உறுப்புகள் எல்லாம் மகிழ்வடையும்படியாக, அவன் முன்னிலையிலேயே உயிரை விடுத்து அமைதியுற விரும்புகிறேன்"[15] என்கிறாள்.

பராங்குச நாயகியோ, "மன்னுடையிலங்கை அரண் காய்ந்த மாயவனே உன்னுடைய சுண்டாயம் நானறிவேன்" மின்னலைப் போலும் இடையையுடைய பெண்களிடத்தில் காதல் வெளிப்படப் பழகி அவர்களை உன் அருள் பெறும்படி செய்தபின் அவர்களுக்கு அடிமையாய் அப்பொருள்களுக்கு முன் நீ அனுபவிக்கும் துன்பத்தைக் கண்டு நான் அஞ்சுகிறேன். இங்குள்ள என் பந்தையும், காயையும் அப்பெண்களின் பொருளாக எண்ணி எடுத்துச் செல்லாதே. அவற்றை என்னிடம் கொடுத்துச் செல் என்று ஊடுகிறாள்.

மேற்சொல்லப்பட்ட கருத்துக்களில் இருந்து அகப்பொருள் துறையைப் பின்பற்றியே இரு நாயகிகளும் பாசுரங்களை அமைத்துள்ளனர். இருவருடைய பாடலும் அமைப்பால் வேறுபட்டாலும் கருத்துக்களின் ஆழத்தில் ஒப்புமையே காணப்படுகின்றன. ஆனால் தோழியின் கூற்று "திருவாய்மொழி"யில் மூன்று திருவாய்மொழியில் பாடியது போல "திருநெடுந்தாண்டகத்தில்" தோழி கூற்று என்பது அமைக்கவே இல்லை.

## அடிக்குறிப்புகள்

1) திி.வா.மொ. (1ப 4தி 1பாசு)
2) திருவிருத்தம் பாசு. எ. 1.
3) பெ.தி.மொ. (1ப 1தி 1பாசு)
4) ஆசார்யஹ்ருதயம் நூ.எ. 94.
5) ஆசார்யஹ்ருதயம் நூ.எ. 134.
6) ஆசார்யஹ்ருதயம் நூ.எ. 134.
7) தி.நெ.தாண்டகம் பாசு. எ. 13.
8) தி.வா.மொழி. (5ப 6தி 1பாசு)
9) தி.நெ.தாண்டகம் பாசு.எ. 20.
10) தி.வா.மொழி. (2ப 4தி 2பாசு)
11) தி.நெ.தா. பாசு. எ. 22.
12) தி.வா.மொழி. (7ப 3தி 3பாசு)
13) தி.நெ.தா. பாசு. எ. 27
14) தி.வா.மொ. (1ப 4தி 1பாசு)
15) தி.நெ.தா. பாசு. எ. 28.

# திருநெடுந்தாண்டகத்தில் காணப்படும் பிற செய்திகள்

புராணம் என்பது பொது மக்களுக்குரிய வைதிக சமய நூல்களாக விளங்கியவை. வேதம், உபநிடதங்கள், இராமாயணம், மகாபாரதம், புராணங்கள் என்பன வைதீக சமயத்தை விளக்குவனவாக வடமொழியில் உள்ளன. "புராண இதிகாசங்களின் நோக்கம் வரலாறு கூறுவதன்று. இலட்சியங்களுக்கு உதாரணங்கள் காட்டுவதாகும் என்கிறார்"[1] அ. வேலுப்பிள்ளை அவர்கள்.

இதிகாசங்கள் மனிதர்களைப் பற்றியும் புராணங்கள் தேவர்களைப் பற்றியும் கூறின. இராமன், இலக்குவன், கோசலை, சீதை, அனுமன், பரதன் முதலிய இதிகாசக் கதை மாந்தர்கள் இலட்சியங்களுக்கு உதாரணங்களாகப் படைக்கப்படுகின்றனர்.

"புராணம் என்பது மனிதமனத்தின் அற்புதமான கற்பனையிலிருந்து தோன்றியது. எனவே புராணம் படைத்தவர்கள் நல்ல இலக்கியப் படைப்பாளர்களாகவே கருதப்படுவர் என்று கூறுவார்"[2]

**புராண வளர்ச்சி**

புராதனம் என்ற சொல் பழமையானது என்ற பொருளை உணர்த்தியது. "புராணம் என்ற வடமொழிச் சொல் புரா – நவ என்ற இரு அடிச்சொற்களிலிருந்து தோன்றிது. இதன் பொருள் பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய்த் திகழ்வது. பழமையான எந்த ஒரு வரலாறோ, கதையோ மரபு வழியாகத் தொடர்ந்து உலக மக்களிடையே கர்ண பரம்பரையாகக் கூறப்படுவன யாவும் புராணம்"[3] என்பர்.

வேதம் முதலிய கலைகளின் புராணங்கள் சிறப்புடையன என்பது ஆன்றோர் துணிவு. எனவே நான்கு வேதத்தில், நான்காவது

வேதமான "அதர்வண வேதத்தில் முதன்முதலாகப் புராணம் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. அதர்வண வேத காலத்திலேயே புராணங்கள் சிறந்த இலக்கியங்களாகக் கருதப்பட்டுள்ளன."[4] வேதங்கள் தோன்றியதற்குப் பின்பு புராணங்களை மக்கள் மதித்துப் போற்றினர் என்று கொள்ளலாம்.

**புராணங்களின் வகை**

புராணங்கள் நான்கு வகைப்படும். அவையாவன;

1) சான்றோர் வரலாற்றினைக் கூறுவன.
2) தெய்வங்களின் அருஞ்செயல்களைப் பற்றிக் கூறுவன.
3) இறைவனின் செயலை ஒரு தலத்துடன் இணைத்துக் கூறுவன.
4) சாதிகள், நதிகள், மரங்கள், விரதங்கள் முதலியவற்றைச் சிறப்பித்துச் சொல்வன.

இந்நான்கினுள் முதலும், கடையும் நீங்க நடுவிலுள்ள இரண்டும் தமிழ் இலக்கிய வரலாற்றில் கி.பி. 14ஆம் நூற்றாண்டு முதல் ஐந்து நூற்றாண்டுகள் தொடர்ந்து வளர்ந்து புராண இலக்கியமாகத் தோன்றின.

"வேத காலத்துத் தெய்வமான விஷ்ணு, நாராயணன் பாரதகாலத்துத் தெய்வமான ஸ்ரீவாசுதேவகிருஷ்ணன் ஆகிய மூவரும் ஒன்றுபட்டபோது வைணவம் செல்வாக்கு மிக்க சமயமாக உருப்பெற்றது என்பார்"[5] ஆ. வேலுப்பிள்ளை.

புராணங்களைப் பற்றிப் பல குறிப்புகள் இலக்கியங்களில் காணப்படுகின்ற முல்லை நிலத் தெய்வமான மாயோனைப் பற்றிய குறிப்புகள்,

"தொல் கதிர்த் திகிரியாற் பரவுதும்"[6]

என்று கலித்தொகையில் குறிப்பிடப்படுகின்றது.

8ஆம் நூற்றாண்டு மாமல்லபுரச் சாசனம் ஒன்று மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம, தசரதராமகிருஷ்ண, புத்த, கல்கி

என்னும் பத்து அவதாரங்களை எடுத்துக் கூறுகின்றது. கிருஷ்ணன் திருமாலுடைய அண்மைக் காலத்து அவதாரமாகக் கொள்ளப்படுகிறான். காத்தலுக்குரிய தெய்வமான திருமாலின் அருட்செயல்களாக இந்த அவதாரங்கள் கணிக்கப்பட்டுள்ளன.

**திருநெடுந்தாண்டகத்தில் புராணச் செய்திகள்**

திருமங்கையாழ்வாரே நம்மாழ்வாரைப் போல வைணவ பக்திப் பாடல்களைப் பெருந்தொகையாகப் பாடியவர். "ஆழ்வார் பாடல்களுள் இவருடையதே கவிச்சுவை நிரம்பின என்பார் மறைமலையடிகள்"[7] திருமாலின் அவதாரப் பெருமைகள் முழுக்க முழுக்க ஆழ்வார் பாடல்களில் பேசப்படுகின்றன. இருப்பினும் பெரும்பாலும் இராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமுமே ஆழ்வார்களின மனத்தைக் கவர்ந்தன என்றே கொள்ளலாம்.

திருநெடுந்தாண்டகத்தில் அவதாரச் செய்திகளும் புராணச் செய்திகளும் விரவிக் காணப்படுகின்றன. திருமால் பிரளய காலத்தில் "உலகை உண்டவன் என்பதால் உலகுண்ட பெருவாயன்"[8] என்கிறார் நம்மாழ்வார்.

"அலை கடலைக் கடைந்தடைத்த அம்மான்" என்று இந்த ஆழ்வார் கூறும் தொடருக்கான புராணக்கருத்து பின்வரும் "பாகவத புராணத்தில்"[9] உள்ளது.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நீண்ட நாள்களாகப் பகை வளர்ந்து கொண்டிருந்தது. தேவர்கள் அனைவரும் அசுரர்களின் கொடுமையைத் தாளாது இறைவனிடம் முறையிட இறைவன் தோன்றி பிரம்மாதி தேவர்களே நீங்கள் யாவரும் அசுரர்களிடம் கொண்டிருக்கும் விரோதத்தைக் கைவிட்டு நட்பு கொள்ளுங்கள். நீங்கள் இருதிறத்தாரும் சேர்ந்து வாசுகி, என்ற பாம்பை கயிராகவும், மந்தர மலையை மத்தாகவும் கொண்டு பாற்கடலைக் கடையுங்கள் என்று கூறினார். அதன்படியே இருதிறத்தாரும் மந்தர மலையைப் பிடுங்கி கடலருகில் கொண்டு வருகையில் தங்களால் முடியாமல் அதனை அப்படியே விட்டு விட்டார்கள். விட்டுவிட்ட அப்பர்வதத்தைத்

திருமால் ஒருகையால் விளையாட்டாகக் கருடன் மேலே ஏற்றிக் கொண்டு தேவ அசுர கணங்களால் சூழப்பட்டவராய்ப் பாற்கடலை அடைந்தார். பறவையிந்திரராகிய கருடன் தோளில் நின்றும் மலையைக் கீழே இறக்கித் தண்ணீர் மத்தியில் தள்ளிவிட்டுப் போனார். அப்போது அம்மலையை இரு திறத்தார்களும் வாசுகியைக் கயிறாகக் கொண்டு கடைகையில் நீரிற்குள் மலை முழுகிப்போயிற்று. பகவான் மத்தாகிய அதியற்புதமான கூர்மரூபத்தை எடுத்துத் தனது அகலமான முதுகினால் பர்வதத்தை மேலே தூக்க, தேவ அசுரர்கள் திரும்பவும் கடலைக் கடைய ஆயத்தமானார்கள். அப்போது இறைவன் மந்தர மலையைத் தாங்கியும், அசுரர்களுடனும், தேவர்களுடனும் அந்த நாகராஜனுக்கு துன்பம் வாராமல் காத்தும் ஒருவராலேயும் அறியப் படாதவராய் இருந்தார். இத்தகைய மகிமையை நினைத்து ஆழ்வார் "அலைகடலை கடைந்தடைத்த அம்மான்" என்கிறார்.

"போராளன் ஆயிரந்தோள் வாணன்மாள"[10] என்பதால் வாணனுடைய வரலாற்றினை ஆழ்வார் கூறுகிறார். "வாணனுடைய மகள் உஷை என்பவள் கண்ணனுடைய பேரன் அநிருத்தனைத் தன் கனவில் கண்டு தன் தோழி மூலம் மந்திர வலிமையால் அவனைத் துவாரகையிலிருந்து தன் நகரான வாணபுரத்துத் தன் அந்தப் புரத்துக்குள் கொண்டுவந்து அவனோடு மகிழ்வாக இருந்தாள். உண்மையறிந்த வாணன் அநிருத்தனைச் சிறைசெய்ய இச்செய்தியை நாரதர்மூலம் அறிந்த கண்ணன் பெரும் படையுடன் வாணபுரத்தை அடைந்து வாணனுடைய "சோ" என்னும் மதிலைத் தகர்த்து அவனுடைய வழிபடுதெய்வங்களான சிவன் முருகன் முதலியவரை வென்று தன்னை வழிபடுவதற்காக இரண்டு கைகளை மட்டும் வைத்து ஏனைய கைகளை வெட்டினான் இச்செய்தியை "பாகவத புராணம்"[11] கூறுகிறது.

**சிவபுராணம்**

ஆழ்வார் புராணச் செய்திகளை தம் பாசுரங்களின்மூலம் விளக்குகையில் அரன் பற்றிய செய்திகளையும் கூறுகிறார்.

"மடப்பாவை இடப்பால் கொண்டான்"[12]
என்ற தொடரில் சிவபுராணத்தைப் புலப்படுத்துகிறார்.

"பிருங்கி முனிவர் பெண் தெய்வத்தை வணங்குபவர் அல்லர். அவர் வண்டாக உருக்கொண்டு சிவனை மட்டும் வலம் வந்து வணங்குவர். இதையறிந்த நாரதர் முப்பெருந்தேவியர்களிடம் கூற, அவர்கள் தம் தம் கணவரிடம் முறையிடக், கலைமகள் பிரம்மனின் நாவையும், இலட்சுமி திருமாலின் திருமார்பையும் பார்வதி சிவனின் இடப்பாகத்தையும் தமக்குரியவராக்கிக் கொண்டார்கள்"[13] அத்தகைய சிவனைத் தன் வலப்பக்கத்தில் கொண்டான் திருமால், என்கிறார் ஆழ்வார்.

**கந்தபுராணம்**

கந்தபுராணச் செய்திகளைத் தம்முடைய "வற்புடைய வரை நெடுந்தோள்" என்ற பாடலில் "வெற்புடைய நெடுங்கடலுள் தன் வேலுய்த்த"[14] என்ற தொடரின்மூலம் புலப்படுத்துகின்றார். "தக்கயாகத்தில் சிவபெருமானை விடுத்துத் தேவர்கள் அவிர்ப்பாகம் கொள்ள முற்பட்டபோது அந்த யாகம் சிவபெருமானால் தோற்றுவிக்கப்பட்ட வீரபத்திரனால் அழிக்கப்பட்டது. தேவர்கள் தீவினைப் பயனை நுகர அசுரர் குலத்துச் சூரபத்மன் முதலியவர்கள் தோன்றித் தேவர் உலகம் முதலியவற்றைக் கைப்பற்றித் தேவர்களைச் சிறையிட்டு அடிமைப்படுத்திப் பல துன்பங்களைச் செய்தனர்.

தம் தவற்றிற்கு வருந்திய தேவர்கள் சிவனை வணங்கச் சிவன் முருகனைத் தோற்றுவித்து அவன்மூலம் சூரபதுமன் முதலிய அசுரர்களை அழிக்கச் செய்தான் சூரபத்மன் இறுதியில் கடலில் மறைய முருகன் தன் வேலைக் கடலில் செலுத்தி அவனுடைய வடிவத்தை அழித்து அகங்காரத்தைப் போக்கி மயிலாகவும் கோழியாகவும் வெளிப்பட்ட அவனைத் தன் கொடியாகவும் வாகனாமாகவும் கொண்டான்"[15] இச்செய்தியை,

"பார் முதிர் பனிக்கடல் கலங்கஉ ள்புக்குச்
சூர் முத றடிந்த சுடரிலை நெடுவேல்"[16]

என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது. மேற்சொன்ன செய்திகளை, கந்தபுராணத்தில் சூரபத்ம வதைப்படலத்தில் காணலாம்.

**திருக்கோவலூர்ப் புராணம்**

"கற்புடைய மடக்கன்னி காவல்பூண்ட"[17] என்பது கண்ணபிரான் பிறந்த அன்றே வசுதேவர் திருவாய்ப்பாடியில் கொண்டுவிட்டு அங்கே யசோதைக்குப் பிறந்த பெண் குழந்தையை எடுத்து வந்தார். அக்குழந்தையையே தேவகிக்குப் பிறந்த எட்டாவது குழந்தையாக நினைத்த கம்சன் அதைக் கொல்ல எண்ணி ஆகாயத்தில் வீச, அது ஆகாயத்தில் மறைந்து விட்டது. இப்பெண் குழந்தையே துர்க்கை. கண்ணனுக்கு முன்பே இவள் பிறந்தவளாகையால் இவள் கண்ணனுக்குத் தமக்கையாகிறாள். தம் தம்பியான கண்ணனை கம்சனிடமிருந்து காத்தலால் திருக்கோவலூர் ஆயனாருக்குக் காவலாக இருப்பதாக திருமங்கை ஆழ்வார் கூறுகிறார். "இத்திருக்கோவலூர் தலபுராணச் செய்தியை ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை தமது திருநெடுந்தாண்டக உரைவிளக்க நூலில் கூறுகிறார்."[18]

## தத்துவக் கருத்துக்கள்

தோத்திரப் பாடல்கள் சமய நம்பிக்கையை வேர்விடச் செய்ய அதனைத் தொடர்ந்து சில உண்மைகளை ஆராய்ந்து அறியும் தத்துவ நெறிக்காலம் தோன்றியது. இந்தியத் தத்துவம் எப்பொழுதும் சமயத்துடனும் தொடர்புடையதாகவே காணப்படுகிறது. "சமய நம்பிக்கை சமுதாயத்தில் இடம் பெற்ற பின்பே அச்சமய உண்மைகளை விளக்கும் சமயத் தத்துவம் தோன்றுவது வரலாற்று நியதியாகும் என்கிறார், ஆ. வேலுப்பிள்ளை."[19] சமய நம்பிக்கை உணர்ச்சி அடிப்படையாகக் கொண்டது. அவ்வுணர்ச்சியின் வெளிப்பாடு அல்லது நெஞ்சக்குழைவு மட்டுமே பக்தி என்று கொள்ளாது, தொண்டுகளால் பழவினைகள் நீக்கி, அறியாமையை எரித்து, இறைவனுக்கு ஏற்புடையதாய் ஆன்மாவைப் பக்குவப்படுத்தப் பக்தி நெறி துணை செய்கிறது. "உடலை வருத்தித் தவமும் யோகமும் செய்ய வேண்டா

பக்தி செய்து இறைவனிடம் சரண் புகுந்தால் போதும் என்கிறார் பேயாழ்வார்”[20]

மலையின் நின்றும் குளிர்ந்த நீரில் மூழ்கியும் ஐவகை நெருப்புக்கு நடுநின்றும் தவம் செய்து உடலை வருத்தத் தேவையில்லை. இறைவன் திருவடியில் மலர் தூவி கைதொழுதால் போதும். வீடுபேறுதானே கிடைக்கும். இறைவன் ஆன்மாவில் குடிபுக்கு ஆட்கொள்வான்.

“இறைவனின் அருகிலிருந்து அன்பு செய்யும் சமநிலை நீடிக்கும்போது பக்தர்கள் தம்மைப் பெற்றோராகவும் இறைவனைக் குழந்தையாகவும் எண்ணி அன்பு காட்டவும் செய்வர். இது வாத்சல்யம் என்பர்.”[21] முதிர்ந்த நிலையில் இறைவனோடு ஒன்றாகிக் கொஞ்சிக் குலவி ஆடிக் களிக்கும் பிருந்தாவன கோபியர் நிலைக்கு வருவர். இது மதுரநிலை. “இறைவனோடு கலந்து தம்மை இழப்பதை விட இறைவனின் பேரின்பத்தைச் சுவைத்து மகிழும் பிருந்தாவன வாழ்க்கையையே வைணவ பக்தி நெறி வலியுறுத்துகிறது.”[22]

திருநெடுந்தாண்டகம் ஆன்மா உய்வதற்கு வேண்டிய ஐந்து பொருள் பொதிந்த செய்திகளைக் கூறுகிறது. அவையாவன;

1. மிக்க இறைநிலை
2. மெய்யாம் உயிர்நிலை
3. தக்கநெறி
4. தடை நீங்க எய்தும் வாழ்வினை
5. தடையாகித் தொக்கு இயலும் ஊழ்வினை

முதல் பத்துப் பாடல்கள் எம்பெருமானுடைய வைகுந்த நிலை, பாற்கடல்நிலை, அவதாரநிலை, உடல்மிசை உயிர் எனப் பரந்த நிலை, பரமபதத்தையும் பாற்கடலையும் அடையும் ஆற்றல் இலராய், அவதாரத்திற்குப் பிற்பட்டவராய் உள்ளிருக்கும் இறைநிலைக்குப் போக முயற்சியால் அடைய இயலாதவராய் உள்ள சிறப்பில்லாத ஆன்மாக்களுக்கு நாற்றிசைகளிலும், பல திருத்தலங்களிலும், அர்ச்சாவதார நிலையில் இருந்து அருள் பாலிக்கும் நிலையை

அறியலாம். (எ.கா) முதல் பாடலில்,

**"மின்னுருவாய் முன்னுருவில் வேத நான்காய்**
**விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்"[23]**

என்பது இப்பாடலில் உடலே ஆன்மா என்னும் பற்றின் போக்கில் தொடக்கமாகத் திருவடிகளோடு தொடர்பு கொண்டது ஈறாக எம்பெருமான் தமக்குக் காட்டிக் கொடுத்த உதவிகளைப் பேசுகிறார்.

அறிவுள்ளவை ஆன்மா (சித்), ஜடம் (அசித்), இறைவன் என்ற மூன்று உண்மைப் பொருளில் முடிவான தன்மையும், அவை மூன்று வேறு ஆனாலும் அவற்றில் எம்பெருமானே ஆன்மாவின் தன்மைக்குரிய பேறு, அந்தத் தலையாய பேறால் இறைவனுடைய தனித்தன்மை திருமேனி, பண்பு, செயல் இவற்றினுடைய சிறப்பை இறைவன் அடியார்க்குக் காட்டும்போது தன் பேறாகக் காட்டுகின்றான். உலகில் உள்ள பொருள்கள் யாவும் நிலையற்றன. காலத்தால் அழியக்கூடியன, ஆன்மா ஒன்றுதான் அழிவில்லாதது, பிறப்பு இறப்பு முதலான தாழ்வுகள் இல்லை. ஆன்மா இறைவனை நினைத்தலே சாலச் சிறந்தது என்ற தத்துவக் கருத்தைக் கூறுகிறார்.

"வேத நான்காய்" என்பதால் திருமாலுக்கு யாவும் உடல் என்பது வேதத்தால் ஒத்துக் கொள்ளப்பட்ட உண்மையாதலின் பிரமன், விஷ்ணு, சிவன் இவர்கள் மூவரும் உலகினர் சமம் என்று கருதினாலும் சிவனும் பிரம்மனும் எம்பெருமானால் படைக்கப்பட்ட ஜீவாத்மாக்கள். எனவே திருமால் முகிலுருவாய் எங்கும் பரந்த பரம்பொருள் அவனே வணங்குதற்குரியவன் என்கிறார். இதனை ஆழ்வார்,

**"மூவுருவுங் கண்டபோ தொன்றாஞ் சோதி**
**முகிலுருவ மெம்மடிகளுருவந் தானே"[24]**

என்பதால் மும்மூர்த்திகளும் வேறுபட்டு நின்றாலும் அறிவால் காணும்போது திருமாலே ஏனை இருவரையும் தன்னுள் அடக்கியவன் என்கிறார்.

இறைவன் ஒவ்வொரு யுகத்திலும ஒவ்வொரு நிறத்தினை உடையவனாக இருக்கிறான். இருப்பினும் அடியார்க்கு அருளுவதில் கருணைக் கடலாக விளங்குகிறான். அப்பெருமான் பெருந்தேவர்

களுக்குத் தலைவன். ஐம்பெரும் பூதங்களும் கலந்தவன், தமிழ் வடசொல்லுமானவன் "திசை நான்கு திங்களும் ஞாயிறுமானவன்"[25] வேதத்தின் முடிநிலையாகிய உபநிடத மந்திர வடிவானவன். பல அவதாரங்களை எடுத்து மக்களின் துன்பத்தைப் போக்கியவன். ஈரேழு பதினான்கு உலகங்களையும் அளந்த எல்லோரிலும் மேம்பட்டவன். அப்படிப்பட்ட இறைவன் மதயானையைப் போன்றே செருக்குடையவன்.

யானை ஒருநாள் கண்டோம் என்று திருப்தி அடைய முடியாத வகையில் என்றும் விரும்பத்தக்கதாய் இருக்கும். அப்படியே எம்பெருமான் என்றும் விரும்பத்தக்க வடிவழகன். யானை செருக்குடையதாய் இருக்கும். அவ்வாறே இறைவனும் ஒத்தாரும் மிக்கார் இல்லாத பெருமையன்.

யானை தான் நினைத்தபோது கைக்கு எட்டினவரைக் கழுத்தில் வைத்துக் கொள்வதைப் போல இறைவன் தன் பக்கம் அடைக்கலம் புகுந்தார்க்குத் தன்னையே கொடுக்கும் உரிமையுடையன்.

யானை தன்மேல் ஏற இருப்பார்க்குப் படிந்து கொடுக்கும். அவ்வாறே எம்பெருமானும் தன்னை அடைய விரும்புவர்களை நடத்திச் செல்லும் பண்புடையவன்.

யானை தான் விரும்பாதவர்களை அடித்துப் பிளந்து போடுவதைப் போல் அடியார்களின் எதிரிகளை இறைவன் அழித்தால், அவனை ஏன் அழித்தாய்? என்று கேட்பாரில்லை.

தன்னைக் கட்டுவதற்காகச் சங்கிலியைத் தானே கொடுக்கும். எம்பெருமானும் தன்னை நுகர்பவர்க்கு கருணையான பக்தியைத் தரக் கூடியவனாவான்.

இத்தகைய இறைவனை,

"தென்னானாய்! வடவானாய்! குடபாலானாய்
குணபால மதயானாய்! இமையோர்க்கென்றும் முன்னானாய்"[26]

என்று ஆழ்வார் பாடுகிறார்.

## மெய்யாம் உயிர்நிலை

இறைவனுடையதனித்தன்மையிலும் அருஞ்செயல்களிலும், உயர்ந்த பண்புகளிலும், பேரழகிலும் ஈடுபட்டு அவனுக்கு அடிமையாகி அவனுக்குத் தொண்டு செய்வது இவ்வான்மாவின் செயல். எனவே, அவன் அருள் கிட்டும்வரை நாம் அமைதியாக இருக்க வேண்டும். இந்த நிலை கடந்து அவன் வடிவழகிலே ஈடுபட்ட ஆன்மா அவன் அருள் கிட்டும்வரை அமைதியாக இராமல் ஆற்றாமையால் "இன்பத்தை வெறுத்தல் துன்பத்துப் புலம்பல்"[27] முதலான நிலைகளில் வருந்தும், தாய் குறிப்பிடும் செய்திகளில் இந்த மெய்யாம் உயிர்நிலையைக் காணலாம்.

"ஓர் ஆறு கரையும் கடந்து பெருகத் தொடங்கினால் பக்கத்தில் சிறு வாய்க்கால்களும் தன் வெள்ளம் போகவும் தானும் குறைவற்றுப் போகி கடலிலே புகுமாறு போல"[28] என்று இவருடைய காதல் மிகுதியைத் தாயார் வார்த்தையின்மூலம் தெரிவிக்கிறார்.

**"பனி நெடுங் கண்ணீர் ததும்பப் பள்ளி கொள்ளாய்"[29]**
**"உறக்கம் பேணாள்"[30]**
**"சொல்லெடுத்துத் தன் கிளியைச் சொல்"[31]**
**"நீர் வண்ணன் நீர்மலைக்கே போவேன்"[32]**

என்று தாய் குறிப்பிடும் செய்திகளாகக் கூறுகிறார்.

## தக்கநெறி

ஆன்மா தன் உள்ளத்து அனுபவத்தில் அவனோடு கூடிய காலை மகிழ்வதும், அவனைப் பிரிந்தவழி ஆற்றாது அரற்றுவதும் தக்கநெறி, அதனைத் தலைவி தோழியிடம் கூறும் பாடல்களில் (21-25) பாடியுள்ளார். வண்டு, நாரை, இவற்றைத் தூதுவிடும் பாடல்களாலும் தக்கநெறியை அறியலாம்.

தலைவி தோழியிடம் தலைவனின் நிலையைக் கூறுகையில்
**"இருவராய் வந்தார் என்முன்னே நின்றார்**
**கைவண்ணம் தாமரை வாய்கமலம்"[33]**

என்றும்,

"............................ கண்டேன்
கனமகரக் குழையிரண்டும் நான்கு தோளும்"[34]

என்றும் அவனுடைய வடிவழகைக் கூறி அவ்வடிவழகில் நான் ஈடுபட்டேன் என்கிறாள். பின்னர் அவனிடத்தில் வண்டையும் நாரையையும் தூதனுப்பித் தன் நிலையை அவனுக்கு எடுத்துக் கூறுமாறு கூறுகிறாள்.

**ஊழ்வினை**

தாய் நிலையில் இருக்கும்போது உன்னுடைய மகிமையை அறியாமல் என் மகளின் நிலையைக் கண்டு அஞ்சி உன்னை வசைபாடினேன். தலைவி நிலையை அடைகையில் உன்னைப் பெற முடியாமல் அஞ்சிப் பின்னர் உன் காட்சி கிடைக்க உன்னிடம் மையல் கொண்டேன். நீ உன் இருப்பிடத்திற்குச் சென்று என்னை உன் பிரிவால் தவிக்கவிட்டாய். அப்போது நான் வண்டையும் நாரையையும் தூதாக அனுப்பினேன். இவற்றிற்கு எல்லாம் காரணம் நான் முற்பிறவியில் செய்த ஊழ்வினையே. அதனால்தான் உன்னருள் பெற முடியவில்லை என்கிறார் ஆழ்வார்.

**வாழ்வினை**

''மின்னு மாமழை தவழும் மேகவண்ணா''[35] என்றார்போலக் கணந்தோறும் புதுப்புது அழகைத் தோற்றுவித்து ஆன்மாவிற்கு மகிழ்ச்சியைத் தந்து இயற்கை இன்னருளால் ஆன்மாவின் அடிமையை ஏற்றுத் தன் மகிழ்வினால் ஆன்மாவை மகிழ்விக்கும் இறைவன் திறத்தில் காணலாம்.

எனவே ஆன்ம வாழ்க்கைக்குத் தேவையான பொருள் பொதிந்த ஐந்து அடிப்படையான கருத்துக்களும் இத்திருநெடுந் தாண்டகத்தில் இருப்பதைக் காணலாம்.

# அவதாரச் சிறப்பு

திருமால் மக்களை நல்வழிப்படுத்தற்பொருட்டும், அவர்களைத் தீவினைகளில் இருந்து காக்கும் பொருட்டும், மீன் முதல் கல்கிவரை பத்து அவதாரங்களில் சில அவதாரங்களைப் பற்றித் திருநெடுந்தாண்டகத்தில் ஆழ்வார் பாடியுள்ளார். இவற்றில் கூர்ம, வராக, பரசுராம அவதாரத்தை ஒரு பாடலிலும், வாமன அவதாரத்தைப் பற்றி இரண்டு பாடல்களிலும், இராமாவதாரத்தைப் பற்றி மூன்று பாடல்களிலும், கிருஷ்ணாவதாரத்தைப் பற்றி ஆறு பாடல்களிலும் பாடியுள்ளார்.

### கூர்மவதாரம்



"இறைவனின் இரண்டாவது அவதாரமான இவ்வவதாரம் தேவர்களும் அசுரர்களும் வாசுகி என்ற பாம்பைக் கயிறாகவும் மந்தர மலையை மத்தாகவும் கொண்டு பாற்கடலைக் கடையும்போது மலை சாய, இறைவன் ஆமை வடிவம் கொண்டு அதைத் தன் தோளில் தாங்கி யாருக்கும் துன்பம் வராமல் காத்து ஒருவராலும் அறியப்படாதவராய் இருந்தார். "இச்செய்தியை பாகவதபுராணம் கூறுகிறது"[36] இத்தகைய மகிமையை எண்ணி ஆழ்வார் "அலை கடலை கடைந்தடைந்த அம்மான்"[37] என்று பாடுகிறார்.

### வராக அவதாரம்

"பாரிடந்து"[38] என்ற சொல்லின்மூலம் இவ்வவதாரத்தை ஆழ்வார் புகழ்கின்றார். இறைவனின் மூன்றாவது அவதாரமான இவ்வவதாரம் "இரண்யகசிபுவையும் அவன் தம்பி இரண்யாக்ஷனையும் அழிப்பதற்காகவும் அண்டச் சுவரினின்று பூமியைத்



தம்முடைய கோரைப் பல்லின் நுனியிலே உயரத் தாங்கிக் கொண்டு வராகரூபியாய் காட்சியளித்தார்"[39] என்று பாகவத புராணம் கூறுகிறது. இச்செய்தியை, "கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய ஊழி ஒருவினை உணர்த்தலின்"[40] என்கிறது பரிபாடல்.

**வாமன அவதாரம்**



திருமாலின் ஐந்தாவது அவதாரம் "திருவிக்ரம அவதாரம்" என்று கூறப்படுகிறது. உலகத்தைப் படைத்தவனான இறைவன் உலகம் தனது உடைமை என்பதை இவ்வவதாரத்தில் வெளிப்படுத்தினான். "ஒண்மிதியில் புனலுருவியொருகால் நிற்ப"[41] என்ற இப்பாடல் முழுவதும் வாமனாவதாரத்தைப் பற்றிச் சிறப்பித்துப் பேசுகிறது. இறைவன் உலகை அளக்கும்போது ஒரு திருவடி பூமியைக் கடந்து தண்ணீர் வரையில் பரந்து செல்லவும் மற்றொரு திருவடி மகாபலி இறைவனின் திருவடி இவ்வளவுதான் என்று நினைக்கும் நினைவைக் கடந்து ஆகாயத்தை ஊடுருவிச் சென்றது. ஆகாயத்தில் உள்ள சந்திர சூரிய, நட்சத்திர மண்டலத்தைக் கடந்தும், பின்னர்ப் பரமலோகம் வரை படர்ந்து, ஈரேழு பதினான்கு உலகங்களையும் அளந்துகொண்டு தன் முயற்சி நிறைவேறியதாய்க் களிப்புடன் நின்றான் இறைவன். இச்செய்தியை "பாரளந்து"[42] என்ற அடிகளால் ஆழ்வார் புலப்படுத்துகிறார். திருவாய்மொழியில் "பரவிப் பணிந்து பல்லூழி ஊழிநின் பாத பங்கயமே"[43] என்று நம்மாழ்வார் பாடுகிறார். இவ்வவதாரத்தை "ஸ்ரீமத் பாகவதம் விரிவாகக் கூறுகிறது".[44]

**பரசுராம அவதாரம்**



திருமாலின் ஆறாவது அவதாரமான இவ்அவதாரத்தை "வற்புடைய வரை நெடுந்தோள் மன்னர் மாள வடிவாய மழுவேந்தி"[45] என்ற அடியால் அறியலாம். பரசுராமனின் தோள் திண்மை மிக்கது. பலமுடையது. மலைபோல உயர்ந்தது. கூர்மையான மழு ஏந்திக் கார்த்தவீர்யன் முதலான மன்னர்கள் மாளுமாறு போர் செய்தவன் என்று பரசுராமனாக அவதரித்த சிறப்பையும் தோள் திண்மையையும் நினைத்துப் பாடுகிறார்.

**இராமாவதாரம்**



திருமாலின் எட்டாவது அவதாரமான இவ்அவதாரம் எடுக்கப்பட்டதன் நோக்கம் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டு நெறியை மக்களுக்கு உணர்த்துவதற்காகவும் வேடர் குலத்தில் பிறந்த குகனைத் தன் சகோதரனாக ஏற்றுக் கொண்ட பரந்த நோக்கத்தை இவ்உலக மக்களும் உணர வேண்டும் என்பதற்காகவும், அரக்கர் குலத்தை அழிப்பதற்காவும் எடுக்கப் பட்டதே இதன் சிறப்பாகக் கருதப்படுகிறது. இராமன் பலரையும் உடன்பிறந்தாராக ஏற்ற இதைக் கம்பர்,

**"குகனொடும் ஐவர் ஆனோம் முன்பு; பின் குன்று சூழ்வான்**
**மகனொடும் அறுவர் ஆனோம் எம்முழை அன்பின் வந்த**
**அகன் அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனோம்"[46]**

என்று கூறுகிறார். இராமாவதாரம் கடவுள் மனிதனாகப் பிறந்து இன்ப துன்பங்களை அனுபவித்த அவதாரமாகக் கருதப்படுகிறது. இலங்கை அரசனான இராவணின் அரண் போன்று விளங்கும் மதிலும் தேர் என்று பேர் பெற்றவை எல்லாம் தனதாக்கிக் கொண்டு வாளை ஏந்திய இராவணனுடைய செல்வம் அனைத்தும் அழியவும், அநுமனைக் கொண்டு இலங்கையிலுள்ள அரக்கர்களை அழியுமாறு செய்தவன். இவற்றை ஆழ்வார் பாடுகையில்,

"தென்னிலங்கை முன்மலங்கச் செந்தீயொல்கி"[47]

என்றும்,

"தென்னிலங்கை அரண்சிதறி"[48]

என்றும்,

"குன்றாத வலியரக்கர் கோனை"[49]

என்றும் இவ்வவதாரத்தின் சிறப்பினைப் புகழ்ந்து பாடுகிறார்.

இதனையே நம்மாழ்வார்,

"இலங்கை செற்றவனே"[50] என்றும்,

ஸ்ரீ ஆண்டாள்,

"சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல் போற்றி"[51]

என்று பாடுகிறார்கள்.

**கிருஷ்ணாவதாரம்**



துவாபரயுகத்தில் அவதரித்த கண்ண பிரானின் மகிமையைப் பற்றிப் பேசுவதே கிருஷ்ணா வதாரம். இந்திரனுக்குப் படைக்கப்பட்ட உணவை ஆயர்கள் கண்ணபிரான் சொற்படி கோவர்த்தன மலைக்கு இட, அதைக் கண்ணன் உண்டுவிடவே கோபம் கொண்ட இந்திரன் கல் மழையைப் பொழிந்தான். அதிலிருந்து ஆயர்களையும், பசுக்களையும் காப்பதற்காக கோவர்த்தமலையைக் குடையாகப் பிடித்தான் கண்ணன். இந்திரன்

குடையாகப் பிடித்தான் கண்ணன். இந்திரன் கல்மழையைப் பொழியவே கல்லாகிய கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்ததால் "கல்லெடுத்துக் கல்மாரி காத்தாய்"[52] "குன்றெடுத்த தோளினாய்" என்று ஆழ்வார் பாடுகிறார்.

இந்திரன் கல் மழையைப் பொழியவே மலையைக் குடையாகப் பிடித்தான். அவன் நீர் மழையைப் பொழிந்திருந்தால் கடலைக் குடையாகப் பிடித்திருப்பான் என்று பட்டர் அருளிச் செய்கின்றார். இதையே ஆண்டாள் தனது பாசுரத்தில்,

**"குன்று குடையா எடுத்தாய்! குணம் போற்றி"[53]**

என்று பாடுகிறாள்.

சாணூர முஷ்டிகர்களை அழித்தபோது தொடக்கத்தில் அவர்களின் மிடுக்கை அழித்து பிறகே அவரின் உயிரை நீக்கினான். இதை ஆழ்வார் "மல்லடர்த்து மல்லரையன்றட்டாய்"[54] என்கிறார்.

கம்சனால் ஏவப்பட்ட கேசி என்ற அசுரன் கண்ணனை எடுத்து விழுங்குவோம் என்று குதிரை வடிவம் கொண்டு வாய்திறந்து வர அவ்வரக்கனின் வாயில் கைவிட்டுக் கிழிந்த செயல் வெள்ளரிப்பழம் விரிந்து கிடந்தாற்போல இருந்ததாம். இதனை "மாகீண்ட கைத்தலத்தென் மைந்தா"[55] என்கிறார். இதையே பரிபாடல்,

**"கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்**
**எரிசினங் கொன்றோய்"[56]**

என்று கூறுகிறது.

இன்னார் இனியார் என்று பாராமல் இடக்கை வலக்கை அறியாத ஆயர்களிடம் தோன்றிக் கன்றுகளைக் காத்தலால் "கன்று மேய்ந்து இனிது கந்த காளாய்"[57] என்கிறார் ஆழ்வார்.

இடையவர் குலத்திலே தோன்றிய கண்ணன் ஆடலில் வல்லவன். இடையர்களுக்குச் செல்வம் மிகுந்ததால் குடக்கூத்தாடி மகிழ்வர். ஊர்ப்பொதுவிடங்களில் குடக்கூத்தாடி அக்குடத்தின்

அழகைக் காண்பவரெல்லாரும் மனதில் பதித்துக் கொண்டு வாழ்நாள் உள்ளவரை சுவைக்கச் செய்பவன் கண்ணன். எனவே ஆழ்வார் கண்ணனை "மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்தாய்"[58] என்கிறார்.

யசோதையின் மகனாக வளர்ந்த கண்ணன் மனநிறைவோடு இருப்பது பசுக்களோடு கூடியிருக்கும்போதுதான் அதனால் "ஆமருவி நிரை மேய்த்தல்"[59] என்று அவன் செயலைப் புகழ்ந்தும், தன் பேரனைச் சிறை செய்த "வாணன் மாள"[60] ஆயிரம் தோள்களைத் துணித்தவன் என்றும், அதிரத மகாரதர்களான பீஷ்மாதிராஜ யோகங்கள் தூசியிலே புரளும்படியாக "பாரதத்தை மாளவூர்ந்து"[61] பிணமும் காணாதபடி பாரதப்போரில் அர்ச்சுனனுக்கு தேரை ஓட்டியவன்.

"வென்றசுரர் குலம் களைதல்"[62] என்பதனை ஆழ்வார் பூதனை, சகடாசுரன், வச்சாசுரன், கேசி, சாணூரமுஷ்டிகர் போன்றோர்களின் வன்செயல்களை அடக்கி வெற்றி கொண்டவன் என்கிறார். "வத்சாசுரன் கன்று உருவில் வந்து கன்றுகளோடு கலந்திருப்பதை அறிந்த கண்ணன் அதன் பின்னங்கால்களைப் பிடித்துத் தூக்கி விளமரத்தின்மீது மோதிப் போட்டான்"[63] என்கிறது ஸ்ரீமத் பாகவதம். இதை ஆண்டாள்,

**"கன்று குணிலா எறிந்தாய்! கழல் போற்றி"[64]**

என்கிறாள்.

"அன்றாயர் குலமகளுக்கு அரையன்"[65] என்பதால் நப்பின்னையினுடைய நற்குடிப்பிறப்புக்கு ஏற்ற குலத்திலே பிறந்ததோடு இவளை மணக்க எண்ணி நந்தகோபர்க்குப் பிள்ளையாய் அவதரித்து நாட்டிலுள்ள பகைவர்களை அடியோடு அழித்து ஏழு காளைகளை வென்று நப்பின்னைக்குக் காட்டினான்.

மேற்சொல்லப்பட்ட கருத்துக்கள் எல்லாவற்றிலும் கிருஷ்ணாவதாரத்தின் மகிமையைப் பற்றியே பேசுகின்றார் ஆழ்வார்.

## புராணம்

1) ஆ. வேலுப்பிள்ளை, தமிழிலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.91
2) மா.ச.அறிவுடைநம்பி, திருநாவுக்கரசர் தேவாரத்தில் இலக்கியக் கொள்கை, ப.196.
3) ப.கோபாலன், பரஞ்சோதி திருவிளையாடற்புராணம் இலக்கிய மதிப்பீடு, ப.10.
4) மேலது ப.17.
5) ஆ.வேலுப்பிள்ளை, தமிழிலக்கியத்தில் காலமும், கருத்தும், ப.132.
6) கலி (முல்லை) பா.எ.104.
7) ஆ.வேலுப்பிள்ளை, தமிழிலக்கியத்தில் காலமும்,கருத்தும். ப.135.
8) தி.நெ.தா. பாசு.எ. 24 – 1வரி.
9) பாகவத புராணம் (அஷ்டமங்கஞ்தம் அத்யாயம் 6–7) பக். 541–44.
10) தி.நெ.தா பாசு.எ. 20–3வது வரி.
11) பாகவத புராணம் (தசமஸ்கந்தம் 63 – அத்யாயம்) பக். 241–42.
12) தி.நெ.தா. பாசு. எ.9, 4 வது வரி.
13) சிவபுராணம் "உமையம்மையார் ஊடலும் கூடலும்" ஏட்டுச்சுவடி – எ. 41.
14) தி.நெ.தா. பாசு. எ. 7 – 3 வது வரி.
15) கந்தபுராணம் பக். 365 – 386.
16) பத்து (திருமுரு) பா.எ.45–46.
17) தி.நெ.தா.பாசு. எ. 7–5வது வரி.
18) திரு.கு.தா.தி.நெ.தா.ப. 298.

## தத்துவம்

19) ஆ.வேலுப்பிள்ளை, தமிழிலக்கியத்தில் காலமும்,கருத்தும்,ப. 147.
20) க. நாராயணன், சித்தர் தத்துவம், ப. 112.
21) மேலது, பக். 117 – 118.
22) மேலது, ப. 118.
23) தி.நெ.தா. பாசு. எ.1.
24) மேலது, பாசு.எ.2.
25) மேலது, பாசு.எ.4.
26) மேலது, பாசு. எ.10.
27) தொல் (மெய்) நூ.எ.22.
28) திரு.கு.தா.தி.நெ.தா. ப. 101.
29) தி.நெ.தா.பாசு.எ. 11 – 2வது வரி.
30) மேலது, பாசு. எ. 12 – 2வது வரி.
31) மேலது, பாசு. எ. 13 – 7வது வரி.
32) மேலது, பாசு. எ. 18 – 7வது வரி.
33) மேலது, பாசு. எ. 21.
34) மேலது, பாசு. எ. 22.
35) மேலது, பாசு. எ. 30.

## அவதாரம்

36) பாகவதபுராணம் (அஷ்டமங்கந்தம் 6–7 அத்யாயம்) பக். 541 – 545.
37) தி.நெ.தா.பாசு.எ.29– 2வது வரி.

38) மேலது, பாசு.எ.20– 5வது வரி.
39) பாகவதபுராணம் திரிதியஸ் கந்தம் (17–19 அத்யாயம்) பக். 199–207.
40) பரி (2திருமால்) பா.எ.15–19.
41) தி.நெ.தா. பாசு.எ.5.
42) மேலது, பாசு. எ. 26–6வது வரி.
43) தி.வா.மொ. பாசு. எ. (2ப 7தி 7பா)
44) பாகவதபுராணம் (அஷ்டமஸ்கந்தம் 18–19 அத்யா) பக்.566–574.
45) தி.நெ.தா. பாசு.எ. 20 – 2வதுவரி.
46) கம்ப (யுத்த) வீடணன் அடைக்கலப்படலம் பா.எ.144.
47) தி.நெ.தா. பாசு.எ. 20 – 2வதுவரி.
48) மேலது, பாசு. எ. 28 – 1வது வரி.
49) மேலது, பாசு. எ. 29 – 3வது வரி.
50) தி.வா.மொ. பாசு. எ. (2ப 4தி 4பா)
51) திருப்பாவை, பா.எ. 24 – 2வது வரி
52) தி.நெ.தா. பாசு. எ. 13 – 1வது வரி.
53) திருப்பாவை பாசு.எ. 24 – 5வது வரி.
54) தி.நெ.தா. பாசு. எ. 13 – 5வது வரி.
55) மேலது, பாசு. எ. 13 – 6வது வரி.
56) பரி (3திருமால்) பா. வரி. 31–32.
57) தி.நெ.தா. பாசு. எ. 16 – 1வது வரி.
58) மேலது, பாசு. எ. 16 – 3வது வரி.
59) மேலது, பாசு.எ.26 – 5வது வரி.
60) மேலது, பாசு.எ.20 3வது வரி.
61) மேலது, பாசு. எ. 28 – 3வது வரி.
62) மேலது, பாசு. எ. 16 – 5வது வரி.
63) பாகவதபுராணம் (தசமஸ்கந்தம் 2வது அத்யாயம்) பக். 26 – 27.
64) திருப்பாவை பாசு. எ. 24– 4வது வரி.
65) தி.நெ.தா. பாசு. எ. 29 – 1வது வரி.

# பெரியவாச்சான்பிள்ளை உரைநயம்

## ஆசிரியர் வரலாறு

இப்பெரியார் சோழவளநாட்டில் திருவெள்ளியங்குடி என்ற ஊரினுக்கு அண்மையிலுள்ள சேங்கநல்லூர் என்னும் ஊரில் கலி 4329 சர்வஜித்து வருடம் ஆனிமாதம் ரோகிணி நட்சத்திரத்தில் அவதரித்தார். இவரது இயற்பெயர் ஸ்ரீ கிருஷ்ணபாதர், அபயப்ரதராஜர் என்பன. தகப்பனார் யாமுநதேசிகர், தாயார் நாச்சியாரம்மாள் ஆவர். பெரியவாச்சான்பிள்ளை நஞ்சீயரிடத்திலும் நம்பிள்ளை இடத்திலும் சகல சாத்திரங்களையும் திருவாய்மொழியையும் கேட்டு அனுபவித்தவர். நம்பிள்ளையின் ஆணைப்படியே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்கள் முழுமைக்கும் உரை செய்தவர். ஆழ்வார்கள் அருளிச் செயல் அனைத்திற்கும் உரைகண்டவர் இவரே ஆதலின் இவர் “வியாக்யானச் சக்கரவர்த்தி” என்று புகழப்பெறுபவர்.

இவர் அருளிய நூல்கள்

1. திருவாய்மொழிக்கு 24000 படி உரை
2. திருப்பாவைக்கு 3000 படி உரை
3. ஏனைய ஆழ்வார் அருளிச் செயல்களுக்கு உரை
4. தர்ம சித்தாந்த சாரசங்க்ரகம்
5. பாசுரப்படி இராமாயணம்
6. கலியன் அருளப்பாடு
7. பரந்த ரகஸ்யம் விவரணம்
8. மாணிக்கமாலை
9. நவரத்னமாலை
10. சகல பிரமான தாத்பர்யம்
11. உபகாரரத்னம்
12. தனிச்லோகி வியாக்யானம் முதலியவை

**உரைநயம்**

“உரைநயந்த பெருமகனார்”, உரையாசிரியருள் வேந்தர் வேந்தன்” என்று சொல்லப்பெறும் பெரியவாச்சான் பிள்ளை உரை எழுதிய கடைசிநூல் இது. இதில் ஒவ்வொரு பாடலுக்கும் அதன் முதற்பாடலோடு உள்ள இயைபை விளக்கிக்கூறும் திறத்தில் இவருடைய உரைநயம் காணப்படுகிறது. சாதாரணமாக ஒரு பாடலுக்கும் அடுத்த பாடலுக்கும் இயைபு இருப்பதாகத் தோன்றாது. ஆனால் இவரது உரையை அறிந்த பின் மிக நுட்பமானவகையில் அந்த இயைபு இருப்பதாக உணர்கிறோம்.

தலைவி தலைவனைச் சந்தித்தல், அவனிடம் மயங்குதல், அவன் தான் தலைவிக்கு அடிமையானவனைப் போல் இருந்தது, தலைவி உரையிலே அவனுடைய உள்ளத்தையும் உணர்வையும் கவர்ந்து கொண்டு சென்றது, பிரிந்த தான் மீண்டும் வரும்வரை தலைவி உயிர் தரித்திருப்பதற்குத் தன் ஊர் இன்னது என்று தலைவன் சொல்லிச் சென்றது, தலைவி தோழி வினவியதற்கெல்லாம் விளக்கம் தந்து கொண்டிருப்பது, தலைவனோடு ஊடல் கொண்டது, தலைவன்பால் வண்டு நாரையைத் தூது விடுதல் முதலான செய்திகளைச் சங்கிலித்தொடர் போல அமைத்துள்ளார்.

செவிலி கூறும் தலைவியினுடைய எம்பெருமான் பற்றிய விளிச் சொற்களுக்கு உரையாசிரியர் காணும் நயங்கள் அவ்வப்பாடல்களில் உள்ளன.

இறைவன் தன் தேவியர் திறத்தும், தம் அடியார் திறத்தும் ஈடுபட்டுச் செயற்கரிய செயல்கள் பல செய்தன இவை என்பதனை உரையாசிரியர் கூறுகிறார். உரையாசிரியர்கள் தம் உரையில் ஆங்காங்கு எடுத்துக்காட்டும் உலகியல் உண்மைகளை பெ.வா.பிள்ளை பல இடங்களில் கூறுகிறார்.

ஒரு சொற்றொடரை எடுத்துக்கொண்டு அதற்குப் பொதுவாக நாம் கருதும் பொருளுக்கு மேல் உரையாசிரியர் தம்முடைய கூர்மையான மதியால் சுவைபடச் சொல்லும் சொற்பொருள்

"உரைநயம்" எனப்படும். இத்தகைய உரைநயத்தை இந்நூல் முழுவதும் காணலாம்.

உதாரணமாக "மை வண்ண நறுங்குஞ்சி" என்ற ஒரே ஒரு பாடலுக்குரிய உரைநயம் மட்டும் கீழே மிகச் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

"மைவண்ண நறுஞ்குஞ்சி" என்ற தொடருக்கான உரையைப் பெரியவாச்சான் பிள்ளை கூறுகையில் கருநிறம் பொருந்தியிருக்கின்ற நறுமணம் கமழும் கரிய மயிர்க்கயிற்றை பின்னே தொங்க என்பதை,

ஒண் சுடர்க் கற்றை என்று சொல்லுகின்ற ஒளிமயமான திருமேனியினின்றும் புறப்பட்ட ஒரு மை போல இருக்கிறது.

யாவும் கண்முன்னே தோன்றும்படியான நினைத்ததைத் தெரிவிக்கும் மயக்கத்தை உடைய மைபோல அவனுடைய குழல் கண்டவர்களுக்கு இருந்தது.

பிரம்மா, ருத்திரன் சடையைப் போலப் பரட்டையாகப் பரந்திருக்கவில்லை. "குழலிருண்டு சுருண்டு" என்கிறபடியே கண்டவர் கண்களில் மை எழுதினாற் போலக் கருமையாய் இருக்கும்.

தன் நிறத்தினாலே தண்டகாரண்யத்தையே மயில் கழுத்து நிறமுடையதாக்கியது. மேலும் மல்லிகை முதலிய பூக்கள் நறுமணம் உண்டாக்குதலன்றி இயல்பாகவே நறுமணமுடையதாக்கும்.

திருமேனியும் திருக்குழலும் இருண்டிருப்பதால் திருக்குழலை அதன் நறுமணம் கொண்டு அறியலாம். நறுமணம் கமழும் இக்குழல் உலகத் துன்பங்களில் வருந்துவோருக்கும் எம்பெருமானைப் பிரிந்து வருந்துவோருக்குமாகிய இரு திறத்தார்க்கும் களைப்பைப் போக்கும்படியான நறுமணமுடையது.

திருவடிகள் தொடங்கித் திருமுடியளவும் யாவும் காண்டற்கு இனிமையாய் இருக்க இவன் திருக்குழலில் ஈடுபட்டது ஏன்? என்று தோழி கேட்க, ஊடற்காலங்களில் எம்பெருமான் இவன் காலில் விழுகையில் காலில் உள்ள செம்பஞ்சுக்குழம்பு முடியில் படுவதால் அது

அடையாளமாக இருத்தலில் முதன் முதல் கண்களில் தோன்றியிருக்கலாம்.

"நாற்றத் துழாய் முடி நாராயணன்"[1]

என்கிறபடி திருத்துழாயின் நறுமணம் தரையில் படிந்து அத்திருமுடியில் அவன் உள்ளத்தை ஈடுபடுத்தியிருக்கலாம். (அ) தலைவி தான் சூடிக்கொடுத்த பூவின் பரிமளத்தைத் திருமுடியில் நுகர்ந்து ஈடுபட்டிருக்கலாம். (அ) எம்பெருமான் வடிவழகு விஞ்சித் தலைக்கு மேலே போய் நறுங்குஞ்சியாக இவள் உள்ளத்தைக் கவர்ந்திருக்கலாம் என்கிறார்.

**குஞ்சி**

இந்தச் சொல்லை ஆசிரியர் கூறுகையில் "குழலிருண்டு சுருண்டேறிய குஞ்சி" என்று சொல்லும்படி கோரைபோலே தொங்காமல் சுருண்டு சுருண்டு காணப்படுதல் (அல்லது) முடியின் முன்மயிர் சுருண்டு சுருண்டு காணப்படுதல் (அல்லது)

மேலிடத்துக் கட்டின மயிரையும் கட்டப்படாமல் தொங்கும் பிடரி மயிரையும் குறிப்பிடுவதாகவும் இருக்கலாம்.

திரள்திரளாகச் சுருண்டிருத்தலன்றித் தனித்தனியே பிரித்து எண்ணும்படி ஒவ்வொரு மயிராகச் சுருண்டு இருத்தல் எனலாம். இதையே நம்மாழ்வார்,

"கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின்
உள்கொண்ட நீலநன்னூல் தழைகொல்?"[2]

என்கிறார். இருந்து மறையக்கூடிய இருள் எப்பொழுதும் கருநிறமாக இருக்கக்கூடிய எம்பெருமான் கூந்தலுக்கு ஒப்பாகாது. ஆகவே காண்பதற்கு இனிதாய் மனத்திற்கு மகிழ்வு தருவதாய் என்றும் நுகர்வதற்குரிய குழல்.

**பின்தாழ**

பின்தாழ என்பதை ஆசிரியர் கூறுகையில் பின்வருமாறு விளக்கங்களைக் கூறுகிறார்.

'நீல நறுங்குழல் கற்றைகள் பின்னே தாழ விடுபட்ட மயிர் நெற்றியில் சுருண்டு காணப்படுவதாகவும் முடியை வாரி முடித்தமையாலே குழல் கற்றை பிடரிக்கு அழகு தந்து பிடரியிலே அலைந்து கொண்டிருக்கிறது. அவனுடைய குழல் அழகில் ஈடுபட்டு உருகுபவள் ஒருத்தி, ஆதலால் இவளை வருத்தாமல் அவன் குழல் கற்றை பிடரியிலே மறைந்தது. இளையபெருமாள் இராமனை சேவித்தது போல திருக்குழல் பின்னே இருந்தது' என்கிறார்.

'எம்பெருமான் உன்னை நோக்கி வரும்போது பின்னால் இருக்கும் தலைமயிரை நீ எங்ஙனம் கண்டிருக்க முடியும்?' என்று தோழி கேட்க உரையாசிரியர் பின்வருமாறு விளக்கம் கூறுகிறார்;

'பெருங்காற்றை எதிர்த்துச் செல்ல முடியாதது போல என்னுடைய வடிவழகை நேரே பார்க்காது முகத்தைச் சற்றுத் திருப்பிக்கொள்ள அப்போது கண்டேன்' என்கிறாள்.

'எம்பெருமான் பேராற்றல் உடையவனாயினும் இவளுடைய வடிவழகை நேருக்கு நேரே அவனால் காணமுடியவில்லை. இவள் வடிவழகுக்குத் தோற்று முகத்தைச் சற்றுத் திருப்பிய அளவில் அவன் குழலைக் கண்டிருக்கலாம்.

வேட்டைக்கு வருகிறவனாகையால் செடிதோறும் குனிந்து குனிந்து மிருகத்தைத் தேடியபோது இவள் கண்டிருக்கலாம்.

களவுப் புணர்ச்சிக்காக வருகிறவனாகையினாலே வேற்று மனிதர்கள் கண்டுவிடுவார்களோ என்று அஞ்சித் தயங்கித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வரும்போது இவன் கண்டிருக்கலாம்' என்று விளக்கம் கூறுகிறார்.

**மகரம்சேர் குழை இருபாடு இலங்கியாட**

"மகரம் சேர் குழை" என்ற சொற்றொடருக்குப் பின்வரும் விளக்கங்களைக் கூறுகிறார்.

தோழி தலைவியை நோக்கி அவனுடைய வடிவழகிலே ஈடுபட்டாயோ? என்று கேட்க தலைவி பின்வரும் விளக்கங்களைக்

கூறுகிறாள். அவன் அணிந்த அணிகலன்களில் ஈடுபட்டேன். அவன் குழலழகோடு காதுகளில் அணிந்த ஈடுபட்டேன்.

அவன் குழலின் இருட்சியால் என் கண்கள் இருண்டு, அவன் திருமுகம் எனக்குத் தோன்றாதிருக்க, அவ்விடத்தே இரண்டு சந்திரர்கள் உதித்தாற்போல மகரக்குழைகள் இருந்தன.

அனுமன் சீதையைத் தேடச் சந்திரோதயம் உதவினாற்போலத் திருக்குழலால் இருண்ட திருமுகத்தைக் காண இக்குழைகள் உதவின.

எம்பெருமானின் காதுகளில் அணியப்பட்ட குழைகள் ஒருமுறை நோக்கும்போது, எம்பெருமானின் மருமகனான மன்மதனுடைய கொடியாகவும், மற்றொரு முறை நோக்கும்போது, பாற்கடலில் வசிக்கும் இறைவனின் முதலவதாரமான மீனாகவும் காட்சி தந்தன.

மன்மதனை விடுத்து அவன் தந்தையின் காதுகளில் சேர்ந்தபடியால் பின்பக்கத் தலைமயிர் இக்காதணிகளுக்கு அணியோ (அ) காதணிகள் பின்பக்க தலைமுடிக்கு அணியோ என்று கூறமுடியாதபடி ஒளி வீசின.

அவன் நடக்கையில் முன், பின்னழகு ஆகிய இரண்டு நிலையிலும் காதணிகள் அசைந்து ஒளி வீசிய அழகை நீ காணப் பேறு பெற்றிலை என்று தோழியிடம் கூறுவதாக உரைஆசிரியர் எழுதுகிறார்.

## எய்வண்ண வெஞ்சிலையே துணையா

இப்படி உறுப்பழகும் அணியழகும் உடையவனுக்குப் பாதுகாவலான பக்கபலமில்லையே எனத் தோழி கேட்கத் தலைவி கூறும் பதிலை ஆசிரியர் கீழ்வருமாறு விளக்குகிறார்.

வில்லாகிய காவலோடு, துணையோடு வந்தார். வில் எய்வண்ண வெஞ்சிலை. யார் அம்பை வைத்தாலும் அதுவே நம்மை எய்து பகைவர்களை அழித்து அவனை ஒரு பெருவீரனாக்கவல்லது. இதை ஒரு கோழை எடுத்தாலும் அவனை மாபெரும் வீரனாக்கவல்லது.

எம்பெருமானைத் தவிர பரசுராமர் உட்பட எவரும் எடுக்க ஒண்ணாத அந்த வில்லை அவருக்கே உரியதாகக் கூடிய வில், அப்படிப்பட்ட வில்லை ஏனைய அணிகலன் போல அணிகலனாகக் கொண்டு வந்தார்.

வண்ணங்கள் தீட்டப்பட்டுப் பார்ப்பதற்கு அழகாய் இருக்கும் வில் இவருக்கு அணி போல இருந்தது. கையும் வில்லுமாகக் கண்டபோது எதிரிகளின் குடல் குழம்பும்படியாகச் செய்தலின் அது வெஞ்சிலையாகும். (வெம்மை + சிலை = வெஞ்சிலை) பகைவர்களை அழிக்கக்கூடிய கொடிய வில் இதே வில் அடியார்கள் வாழும்படியாக இருத்தலின் வண்ணச் சிலையாகும்.

பதினான்காயிரம் படைவீரர்களுடைய கரன் முதலியவரோடு போரிட்டு வந்த எம்பெருமானை முழுமையாகத் தழுவிக் கொண்ட சீதையைப் போல அவனழகில் ஈடுபட்ட தலைவி பேசுவதாக உரையாசிரியர் கூறுகிறார்.

**துணையா**

'ஏனைய ஆயுதங்களைச் சுமந்து வாராமல் வில் ஒன்றையே கொண்டு வந்தாரோ! இன்பம் நுகர வருபவர்கள் பூமாலை சந்தனம் முதலிய பொருள்களோடு வராமல் வில்லைத் தாங்கி வந்தது ஏன்?' என்று தோழி கேட்க,

வேட்டைக்குச் செல்ல வந்தாராகலின் வில்லையே "துணையாகக்" கொண்டு வந்தார்.

தன்னையும் சீதையையும் சேர்த்து வைத்தது வில் ஆதலால் அந்த "நன்றி உணர்வோடு" கொண்டுவந்தார்.

சீதையை மணம் புரிய வந்த இடத்தில் வழியில் இடையூறாய் இருந்த தாடகை, சுபாகு என்பவர்களை அழிப்பதற்காகக் கொண்டு வந்தார்.

14000 அரக்கரைத் தாம் தனித்து நின்று அழிப்பதற்கு உதவியது வில், அதனைத் துணையாகக் கொண்டு வந்தார்.

என்னைப் பிரிந்த தளர்வுக்குத் தமக்கு ஒரு ஊன்றுகோலாக வில்லைக் கொண்டு வந்தார். தேவர்களுள் ஒப்பற்ற இவருக்குப் படைக்கலங்களுள் மேம்பட்ட வில் துணையாயிற்று.

**இங்கே**

நாம் எம்பெருமானுடைய சந்திப்பைக் கண்டதாகிய புதையலை எடுத்த இடம் இதுவே.

அவரோடு கலந்து உள்ளத்தைப் பறிகொடுத்த இடம் இது. ஒருகாலில் சங்கு, ஒருகாலில் சக்கரம் என்று முத்திரைகள்பட, அவர் நடந்து சென்றாராதலின் அவர் திருவடி பட்ட இடத்தை நாம் முகர்ந்து கொண்டு கிடக்கும்படியான இடம் இது.

**வந்தார்**

இவ்விடத்தில் அவர் செய்தது என்னென்று தோழி கேட்க, இவ்விடத்தை வந்துபோகும் இடமாகக் கருதாமல், என்னோடு நிலையாக இருக்கக்கருதிய இடமாகக் கருதி வந்தார். நான் சற்றும் எதிர்பாராதிருக்க எனக்கு உதவுவதற்காகவே அவர் வந்தார்

நான் அவரை அடைவதற்கு நல்வினை ஒன்றும் செய்யா திருக்க நான் அவரை நோக்கிச் செல்லாதிருக்க அவரே என்னை நோக்கி வந்தார்.

இப்படி வருகின்றவர் உன்னோடு கலந்து மகிழ்ந்து போகின்ற அன்றைக்கும் பிரிந்து கலங்கி வருகின்ற அன்றைக்கும் வேறுபாடு உண்டோ? என்று தோழியை வினவ,

**இருவராய் வந்தார்**

தம்முடைய திருவுருவம் இரண்டு திறந்து நிலையினதாய் வந்தார். பிராட்டியைப் பிரிந்தபோது உணவு, உறக்கம் துறந்து தம்மேல் ஊரும் பூச்சிகளைக் கூட விரட்டாமல் இருந்தவாறு என் பிரிவாற்றாது, உணவு உறக்கத்தைத் துறந்து வந்தார்.

இன்பம் நுகர்வதற்காகத் தனியே வருகின்றவராகையாலே கூடச் சிலரைக் கூட்டிக் கொண்டு வரவில்லை. ஜனகருடைய

அரண்மனையாய் இருத்தலால் அங்கு மனப்பருவத்தில் கன்னியர் நால்வர் இருக்க அந்நிலையில் பலரோடு வந்திருக்கலாம். ஆனால் இங்கு "ஒருவரே இருவராய் வந்தார்".

மைவண்ண நறுங்குஞ்சி என்ற உறுப்பழகோடும், மகரம் சேர் குழை..... என்ற அணியழகோடும் வந்தார். வீரம் உவகை என்ற இரண்டும் தோன்ற (அல்லது) காதலும் வீரமும் தோன்ற வந்தார்.

பணிவும் தூது விடுதலும் தோன்ற வந்தார். கைவண்ணம் தாமரை, வாய்கமலம் என்பது பணிவு. "கண்ணினையு அரவிந்தம் அடியும் அஃதே" தூது செய்கின்ற கண்களைக் கொண்டு நான்கடி என்னை நோக்கி வந்தது. இவளைப் பெற்றால் உயிர் வாழ்தல் பெறாவிடில் உயிர் விடுதல் என்ற நிலையில் வந்தார்.

அவ்வண்ணத்தவர் நிலைமை என்பது எளிமை, அவரைத் தேவர் என்பது மேன்மை, ஆக எளிமையும் மேன்மையும் தோன்ற வந்தார்.

கண்ணினையும் அரவிந்தம் என்பது "தெய்வநிலை" சிலையே துணையா என்பது "மனிதநிலை" ஆக தெய்வநிலை மனிதநிலை தோன்ற வந்தார். தூதரும் நாயகருமாய் வந்தார்.

**"குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்**
**எழுகமலப் பூவழகர் எம்மானார்"[3]**

என்றாற்போலச் சந்திரர் வந்தார்களோ! சூரியர் வந்தார்களோ என்று ஐயுறும்படியும் இரண்டு புணர்பூச நட்சத்திரம் சேர பூமியில் வந்தாற் போலவும் வந்தார்.

யானையைப் போன்ற நடையும், சிங்கத்தைப்போன்ற ஏறு நடையும் பெருமித நடையும் கொண்டும், புலி பதுங்கி நடக்கிறதோ (அ) காளை செருக்கோடு நடந்ததோ என்னும்படியும் வந்தார்.

வேட்டை விலங்கைத் தேடிவருவது போல (ஆறு) வழி அவ்வண்ணத்தவர் நிலைமை பேரழகு (பேறு) பெருமை. எனவே ஆறும் பேறும் தோன்ற வந்தார்.

**"நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் நாராயணனே நீ யென்னையன்றிலை"[4]**

என்பது போல நானுண்டானாகில் தாமுண்டாய் நானில்லையேல் தாமும் இல்லையாம் படியும், தாமுண்டாயாகில் நானுண்டாய் ஆன இருவகை இருப்புக்களோடு வந்தார்.

இளைய பெருமாள் தம் தன்மை என்பது ஒன்று இன்றிப் பெருமானுடைய வலக்கரம் போலச் செயல்பட்டமையாலும் அக்கரம் அணைக்கும் தோளாதலின் வலக்கரத்தோடும், இளைய பெருமாள் படுக்கையாதலின் படுக்கையோடும், ஆண்டவனாகவும், அடியவனாகவும் வந்தார்.

தம் காலை என் தலையில் வைக்காது எம் காலைத் தம் தலையிலே வைத்துக் கொள்ள வந்தார். நர நாராயணன் போல ஒருவரே இருவராய் வந்தார் என்கிறாள் தலைவி, என்று பெரியவாச்சான்பிள்ளை கூறுகிறார்.

**என்முன்னே நின்றார்**

இப்படி வந்தவர் செய்தது என்ன? என்று தோழி கேட்கத் தலைவி பின்வருமாறு விளக்கம் கூறுகிறாள்.

பெரிய வேகத்தோடு வந்தவர் கடலைக் கண்டு திகைக்கின்ற அனுமன்போல் என்னைக் கண்டவுடன் மேல் நடக்காது என்முன்னே நின்றார்.

**"இன்னம் என்கையகத்து ஈங்கொருநாள்**
**வருதியேல் என் சினம் தீர்வன் நானே"[5]**

என்று பெருமாள் திருமொழி கூறுவதுபோல அவர் என் முகத்தைப் பார்க்க மாட்டாரோ என்று நான் ஆசை கொள்ளவும், இவள் நம்மைப் பார்க்க மாட்டாளோ என்று பேரார்வத்துடன் நின்றார். பசித்தவர்களுக்குச் சோறு இடுவது போல அவன் வடிவழகைக் காண எனக்கு ஆசை தீருமளவும் நின்றார். தம்மைக் காணப் பலரும் தவம் செய்து முயலவும் அவரை விடுத்து ஒரு தவமும் செய்யாத என்முன் நின்றார். "அவனை நான் செய்வது காணே"[6] என்று தலைவி கூறுகிறாள்.

ஊனக் கண்களுக்குக் காணமுடியாத தம்மை என் ஊனக் கண்களுக்குக் காட்டினார். தம்மைக்காணத்தக்க ஞானக்கண்ணை எனக்குத் தந்து காட்சியும் வழங்கினார். அவர் முன்கைகட்டிக் கொண்டு நிற்க வேண்டியவள் நான், என் முன் கைகட்டிக் கொண்டு நின்றார்.

இப்படி அவர் உன்னைக் கண்டு இரங்கிய அளவில் மேல் செய்தது என்ன?

"செம்மையுடைய திருக்கையால் தாள் பற்றி அம்மி மிதிக்க"[7] என்று சொல்லும்படி என் உள்ளத்தைத் தம் பக்கம் அழைத்துக் கொள்ளும் வகையில் தம் தாமரை போன்ற கைகளையும் வாயையும், கண்களையும் கொண்டு அவர் செய்த பலவகையான செயல்களால் நான் மயங்கி என்நிலை மறந்து நின்றபோது எனக்கு ஏற்பட்ட அச்சம் அவரைத் தேவர் என்று கருதியதனால் ஏற்பட்டதே அதன் விளைவால் அவரை இழக்கும் நிலை ஏற்பட்டது.

**தேவர்**

தேவர் என்ற சொல் பல பொருள்களில் வருகிறது. "செல்வர் பெரியர் சிறுமானிடர் நாம் செய்வதென்"[8] என்று கூறுவது போலச் சிறப்பு மிக்கவர்.

**"நல்லார் தோழீ நாகணை மிசை நம்பரர்"[9]**

என்று போற்றத்தக்கவர். சிறுமானிடர் என்று கருதத் தகுதியற்றவராகிய நாம் அவர் காலிலே விழத்தக்கோம். "மனிதர்க்குத் தேவர் போலத் தேவர்க்குத் தேவர்" என்றும்,

**"அயர்வறுமமரர்கள் அதிபதி"[10]**

என்று கருதப்படும் தேவர்களுக்கும் தேவர்.

இவர் ஈருவாகிலும் விளையாட்டு நிகழ்த்தும் பரம்பொருள், ஏனைய பலரையும் வெற்றி கொள்பவர். அப்படிப்பட்ட இறைவனுக்கே "நாமாட் செய்வோம்"[11] ஆறும் பேறும் அவனே அப்படிப்பட்ட இறைவனான,

"நாராயணனே நமக்கே பறைதருவான்"[12] அவனுக்கு "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்"[13] நாம் அடிமை. நான் அச்சத்தால் அவனை இழந்தேன். எங்கள் இருவர் தன்மையும் அறிந்த நீ என்னுடன் இருந்திருந்தால் என் மயக்கத்தைப் போக்கி இருக்கலாம் என்றாள்.

இவ்வாறு சொற்களுக்குச் சொற்பொருள் காணாமல் அவற்றின் உள்ளார்ந்த கருத்துக்களை எல்லாம் தம் நிறைந்த புலமையால் கண்டு வழங்கும் திறம் இத்திருநெடுந்தாண்டக உரையுள் காணப்படுகிறது.

## அடிக்குறிப்புகள்

1) திருப்பாவை பாசு. எ. 10–3வது வரி.
2) தி.வா.மொ. பாசு.எ. (7ப 7தி 9பாசு)
3) நாச்சியார் தி.மொ. பாசு. எ. 11–2.
4) நான்முகன் திருவந்தாதி பாசு. எ. 7.
5) பெருதி.மொ. பாசு. எ. (6தி 8பா)
6) நாச்சி. தி.மொ. பாசு. எ. (5தி 8பாசு)
7) மேலது பாசு. எ. (6தி 8பாசு)
8) மேலது பாசு. எ. (10தி – 10 பாசு)
9) மேலது பாசு. (10தி 10பாசு)
10) தி.வா.மொ. (1ப 1தி 1பாசு)
11) திருப்பாவை பாசு.எ. 29 7வது வரி.
12) மேலது பாசு. எ. 1 – 7வது வரி.
13) மேலது பாசு. எ. 29, 6வது வரி.

# முடிவுரை

## ஆய்வு முடிவுகள்

### இயல் – I

திருநெடுந்தாண்டகத்தில் கூறப்பட்ட தாய் தலைவி கூற்றுக்கள் அனைத்தும் தொல்காப்பிய களவியல் பகுதியில் உள்ள சில கூற்றுக்களோடு பொருத்தப்பட்டுள்ளன. தாய் கூற்று நிகழும் இடங்களான பதின்மூன்றில் நான்கு கூற்றுக்களே பொருந்தியுள்ளன என்பது இவ்வாய்வின் முடிவு. இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்ட தலைவியின், மெய்யின்கண் தோன்றிய மாற்றத்தை அறியும் பொருட்டுக் கட்டுவிச்சியைக் கேட்கிறாள். இது தொல்காப்பியர் கூறும் "கட்டினும்" என்ற கூற்றிற்குப் பொருந்தும். இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்ட தலைவன் பிரிந்து சென்றமையால் வருத்த மேலிட்ட தலைவியின் ஒவ்வொரு நிலையான "காமமேற்படுத்தகண்ணும்" "அளவுமிகத் தோன்றிய கண்ணும்", "காதல் கைமிகல்", "கனவினரற்றல்" ஆகிய நிலைகளைத் தாய் தம் வாயிலாகத் தெரிவிக்கிறாள். மேலும் இப்பகுதியில் இறைவனிடம் ஈடுபட்டு, உலகியலுக்கு அப்பாற்பட்டவளாக விளங்கும், தன் பெண்ணின் தோற்றத்தில் ஏற்பட்ட வேறுபாடுகளை, அவள் நலம் பற்றி வினவிய அயலக மங்கையரிடம் தன் வருத்தம் தோன்றக் கூறிய செவிலித்தாய், தன் உள்ளத்துள் அவள் ஆன்ம பக்குவத்தை அறிந்து மிக்க நிறைவு கொண்ட செய்தியைக் காணலாம்.

### தலைவி

இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்ட தலைவி, தான் பெற்ற இன்பங்களையும், தலைவனால் ஏற்பட்ட நிலையையும் தோழியிடம் கூறி, அறத்தொடு நிற்கிறாள். தலைவன் தலைவியைக் காணும் "காட்சி", "மைவண்ண" என்ற பாடலில் அமைக்கப்பட்டுள்ளது. இக்காட்சியில், ஒருவரை ஒருவர் கண்டு உள்ளத்தால் ஒன்றுபடத்

தலைவனால் தாம் பெற்ற இன்பத்தையும், துன்பத்தையும் தலைவி கூறுகிறாள். "தன்னைத் தலைவி காணாமல் தான் அவனைக் காணும் காட்சியான "மறைந்தவற்றைக் காண்டல்" தன்னை அவன் காணுமாறு நிற்றலாகிய "தற்காட்டுறுதல்" தலைவன் கூறிய சொற்கேட்டு எதிர்மொழி கூறாது நிற்றலாகிய "நிறைந்த காதலின் சொல்லெதிர் மழுங்கல்" ஆகிய இம்மூன்றும் கூற்று நிகழாது, குறிப்பினால் நிகழுமாதலின் இப்பாடலில், இம்மூன்றையும் திருமங்கையாழ்வார் அமைத்திருப்பதைக் காணலாம். தலைவன் செயலில் ஈடுபட்ட தலைவி தலைவன் "நைவளம்" என்ற பண்ணைக் கொண்டு இசைக்க அவன் இசைக்கு மயங்குவதைப் "பழி தீர் முறுவல் சிறிதே தோற்றல்" என்ற கிளவிக்குப் பொருந்தும். தலைவன் பிரிவால் தலைவியின் மெய்யின்கண் பல மாற்றங்கள் தோன்றத் தலைவி, தலைவன் பிரிவால் வருந்துவதைப் "பிரிவுழிக் கலங்கல்" என்னும் கிளவிக்குத் தலைவனால் தாம் பெற்ற இன்பத்தைப் "பெற்றவழிமலியினும்" என்ற கூற்றிற்கும், பொருந்தும் பின்னர் வண்டையும், நாரையையும் தூதுவிட அப்பொழுதும் தலைவன் வாராமையால் ஊடல் கொள்ள அவளைத் தோழி சமாதானம் கூறும்போது, அதை மறுத்துப் பேசும் தலைவி, இடத்துக்கூற்று நிகழும். இது "கூறிய வாயில் கொள்ளாக் காலை" என்ற கிளவிக்குப் பொருந்தும்.

இவ்வாறு தலைவி கூற்றாகத் தோழியிடம் அவனைச் சந்தித்து அவனைக் கூடிய திறம் அவள் ஆறுதல் கூறிப்பிரிந்த செய்தி, அவனை அழைக்க வண்டையும், நாரையையும் தூது விடுத்த செய்தி, அவன் உடனே வராமையால் கொண்ட ஊடல் அவன் செய்த பெருமிதச் செயல்கள் அவன் காட்சி வழங்கி மனநிறைவு தந்தமை ஆகியன தலைவி கூற்றில் இடம் பெறுகின்றன. இவை யாவும் அகப்பொருள் கோட்பாட்டில் அமைந்தவை.

## பெரிய திருமொழி, திருநெடுந்தாண்டகம்

பெரிய திருமொழியில் ஒவ்வொரு திருமொழிக்கும் முதல் பாசுரத்தின் முதல் அடியில் உள்ள முதல் சீரே தலைப்பாக உள்ளது. திருநெடுந்தாண்டகத்தில் தாய், தலைவி, பாசுரமாகப் பத்துப் பத்துப் பாடல்களும், பாடியது போலப் பெரிய திருமொழியில் எட்டுத்

திருமொழிகள் தாய் பாசுரமாகவும் பன்னிரண்டு திருமொழிகள் தலைவி பாசுரமாகவும் திருமொழிக்குப் பத்துப் பாசுரங்கள் பாடியுள்ளார்.

இவ்வாறு அகப்பொருள் கோட்பாடுகள் பலவற்றையும் தூய தெய்வக் காமத்தில் இணைத்துப் பாடும் பக்திப் பாசுரங்கள் பலவற்றைப் பரகால நாயகி என்ற நிலையில் திருமங்கையாழ்வார் பாடுவதனைக் காணலாம்.

**இயல் – 2**

ஆழ்வார்களுக்கெல்லாம் நடுநாயகமாக விளங்கும் நம்மாழ்வார் ''சடகோபர்'' என்ற பெயரைப் பெற்றவர். இவர் அருளிய நான்கு நூல்களும் வேதங்களோடு ஒக்கும், தி.ம. ஆழ்வார் அருளிய ஆறு நூல்களும் நம்மாழ்வார் அருளிய வேதங்களுக்கு அங்கங்களாக விளங்கும். முன்னவர் பராங்குசர், பின்னவர் பரகாலர். திருவாய்மொழியில் தாய் பாசுரமாக ஏழு திருமொழிகளும் தலைவி பாசுரமாக பன்னிரண்டு திருமொழிகளும் தோழி பாசுரமாக மூன்று திருமொழிகளும் உள்ளன. ஆனால் திருநெடுந்தாண்டகத்தில் தோழி பாசுரமே இல்லை. இருப்பினும் இருவரும் அகப்பொருள் கோட்பாடுகளை அமைத்தே பாசுரங்கள் பாடினர்.

**இயல் – 3**

**புராணம்**

புராணங்கள் யாவும் இறைவனின் சிறப்பியல்புகளையும், அவன் அடியார்களுக்கு அருள்கின்ற தன்மையினையுமே கூறுகின்றன. இவ்வியலில், சைவ புராணமாகிய, சிவபுராணமும், கந்தபுராணச் செய்திகளும், கூறப்பட்டுள்ளன. திருக்கோவலூரில் வீற்றிருக்கும் துர்கையின் மகிமையும் அவன் திருமாலுக்குத் தமக்கையாகிய திறத்தையும் திருக்கோவலூர்ப் புராணம் கூறுகிறது.

**தத்துவம்**

உடலை வருத்தித் தவமும் யோகமும் செய்யாது, பக்தியோடு இறைவனிடம் சரண்புகுந்தால் போதும் என்ற கருத்தை நிலைநிறுத்தி,

இறைநிலை, மெய்யாம் உயிர்நிலை, தக்கநெறி, ஊழ்வினை ஆகிய கருத்தை இவ்வியல் விளக்குகிறது.

**அவதாரம்**

திருமாலின் பத்து அவதாரங்களில் மச்ச அவதாரம், நரசிம்ம அவதாரம், பலராம அவதாரம் தவிர ஏனைய அவதாரங்களைப் பற்றியும் ஆழ்வார் பாடுகிறார். அவதாரங்கள் எடுத்ததற்கான காரணத்தையும் அதன் சிறப்பு அம்சத்தையும் இவ்வியல் கூறுகிறது.

மேற்சொல்லப்பட்ட திருநெடுந்தாண்டகத்தில் மிக்க இறைநிலை முதலிய அர்த்தப் பஞ்சகம், பிறப்பில் பல பிறவிப் பெருமானாகிய திருமால் எடுத்த அவதாரங்களின் சிறப்பு, திருமாலைப் பற்றியும், ஏனைய தெய்வங்களைப் பற்றியும் வழங்கும் புராணச் செய்திகள் என்பன பலவும் இவ்வியலில் கூறப்படுகின்றன.

**இயல் – 4**

“மை வண்ண நறுங்குஞ்சி,,,,,,,” என்ற பாடலில் உள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் உள்ள ஆழமான பொருளை விளக்கிக் கூறும் பெரியவாச்சான்பிள்ளை உரை கூறும் பாங்கு இவ்வாய்வின் மூலம் தெரிய வருகிறது. சான்று – “துணையாய்” என்ற சொல்லுக்கு,

1. வேட்டைக்குச் செல்லுவதால் வில்லைத் துணையாகக் கொண்டு வந்தார்.
2. தன்னையும் சீதையையும் சேர்த்து வைத்த வில்
3. என்னைக் கைப்பிடித்து மீண்டு வரும் வழியில் பரசுராமர் போல் பலர் உளராயின் அவர்களை அழிப்பதற்காகக் கொண்டு வந்தார்.
4. என்னைப் பிரிந்த தளர்வுக்கு தமக்கு ஒரு ஊன்று கோலாகக் கொண்டும்.

வருவதால் இத்தகைய சிறப்புப் பொருந்தியவர் அவருக்குத் துணையாய் நின்றது என்று உரைகூறும் சிறப்பு வாய்ந்தது. இதுபோல இப்பாடலில் அமைந்த எல்லாச் சொற்களுக்கும் ஆழமான பொருளை உணர்த்தி விளக்கம் கூறுகிறார்.




## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருநெடுந்தாண்டகம்

மின்னுருவாய்முன் னுருவில்வே தம்நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்
பின்னுருவாய் முன்னுருவிற் பிணிமூப் பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில் திகழும் சோதி
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடி என்தலை மேலவே

பாருருவிநீர் எரிகால் விசும்பு மாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவரு மேஎன நின்ற
இமையவர்தம் திருவுருவே எண்ணும் போது
ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ
ஒன்றுமா கடலுருவம் ஒத்து நின்ற
மூவுருவும் கண்டபோது ஒன்றாம் சோதி
முகிலுருவம் எம்மடிகளு ருவந் தானே

திருவடிவிற் கருநெடுமால் சேயனென்றும்
திரேதைக் கண்வளையுருவாய்த் திகழ்ந்தானென்றும்
பெருவடிவிற் கடலமுதம் கொண்டகாலம்
பெருமானைக் கருநீலவண்ணன் தன்னை

ஒருவடிவத்தோ ருருவென்று உணரலாகாது
ஊழிதோறூநின் றேத்தலல்லால்
கருவடிவிற் செங்கண்ணவண்ணன் தன்னைக்
கட்டுரையேயாரொருவர் காண்கிற்பாரோ?

இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை
இருநிலம்கால் தீநீர்விண் பூதமைந்தாய்
செந்திறத்த தமிழோசை வடசொல்லாகித்
திசைநான்கு மாய்த்திங்கள் ஞாயிறாகி
அந்தரத்தில் தேவர்க்கும் அறியலாகா
அந்தணனை அந்தணர்மாட்டு அந்திவைத்த
மந்திரத்தை மந்திரத்தால் மறவாது என்றும்
வாழுதியேல் வாழலாம்மட நெஞ்சமே!

ஒண்மிதியிற் புனலுருவி ஒருகால் நிற்ப
ஒருகாலும் காமருசீரவுண னுள்ளத்து
எண்மதியும் கடந்து அண்டமீது போகி
இருவிசும்பி னூடுபோயெழுந்து மேலைத்
தண்மதியும் கதிரவனும் தவிரவோடித்
தாரகையின் புறம் தடவி அப்பால் மிக்கு
மண்முழுதும் அகப்படுத்துநின்ற எந்தை
மலர்புரையும் திருவடியே வணங்கினேனே.

அலர்புரிந்த நெடுந்தடக்கை அமரர்வேந்தன்
அஞ்சிறைப்புள் தனிப்பாகன். அவுணர்க்கு என்றும்
சலம்புரிந்தங் கருளில்லாத் தன்மையாளன்
தானுகந்த ஊரெல்லாம் தன்தாள்பாடி

நிலம்பரந்துவரும் கலுழிப் பெண்ணையீர்த்த

நெடுவேய்கள் படுமுத்த முந்தவுந்தி

புலம்பரநது பொன்விளைக்கும் பொய்கைவேலிப்

பூங்கோவலூர் தொழுதும் போது நெஞ்சே!

வற்புடையவரை நெடுந்தோள் மன்னர்மாள

வடிவாய மழுவேந்தி உலகமாண்டு

வெற்புடைய நெடுங்கடலுள் தனிவேலுய்த்த

வேள்முதலாவென்றானூர், விந்தம்மேய

கற்புடையமடக்கன்னி காவல்பூண்ட

கடிபொழில்சூழ் நெடுமறுகில் கமலவேலி

பொற்புடைய மலையரையன் பணியநின்ற

பூங்கோவலூர் தொழுதும்போது நெஞ்சே!

நீரகத்தாய் நெடுவரையினுகச்சி மேலாய்!

நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்தகச்சி

ஊரகத்தாய்! ஒண்துறைநீர் வெஃகாவுள்ளாய்!

உலகமேத்தும் கள்வா!

காரகத்தாய்! கார்வனத்துள்ளாய்! கள்வா!

காமருபூங்காவிரியின் தென்பால்மன்னு

பேரகத்தாய்! பேராதுஎன்னெஞ்சினுள்ளாய்!

பெருமான்! உன்திருவடியே பேணினேனே.

வங்கத்தால் மாமணிவந்துந்துமுந்நீர்

மல்லையாய்! மதிள்கச்சியூராய்! பேராய்!

கொங்கத்தார் வளங்கொன்றையலங்கல் மார்வன்

குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்

பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரின்மேலாய்!
பனிவரையி னுகச்சியாய்! பவளவண்ணா!
எங்குற்றாய்? எம்பெருமான்! உன்னைநாடி
ஏழையேன் இங்ஙனமேஉழி தருகேனே.

பொன்னானாய்! பொழிலேழும் காவல்பூண்ட
புகழானாய்! இகழ்வாய தொண்டனேன்நான்
என்னானாய்! என்னானாய்! என்னலல்லால்
என்னறிவன் ஏழையேன்? உலகமேத்தும்
தென்னானாய்! வடவனாய்! குடபாலனாய்!
குணபாலமதயானாய்! இமையோர்க்கு என்றும்
முன்னானாய்! பின்னானார் வணங்கும்சோதி!
திருமூழிக் களத்தானாய்! முதலானாயே!

பட்டுடுக்கும் அயர்ந்திரங்கும் பாவை பேணாள்
பனிநெடுங்கண் நீர்ததும்பப் பள்ளி கொள்ளாள்
எள்துணைப்போது என்குடங்காலிருக்க கில்லாள்
எம்பெருமான் திருவரங்கம் எங்கே? என்னும்
மட்டுவிக்கிமணி வண்டு முரலும் கூந்தல்
மடமானை இதுசெய்தார் தம்மை மெய்யே
கட்டுவிச்சி சொல்லென்னச் சொன்னாள், நங்காய்!
கடல்வண்ணார் இதுசெய்தார் காப்பாராரோ?

நெஞ்சுருகிக் கண்பனிப்ப நிற்கும் சோரும்
நெடிதுயிர்க்கும் உண்டறியாள் உறக்கம் பேணாள்
நஞ்சவிரல் துயிலமர்ந்த நம்பீ! என்னும்
வம்பார் பூம்வயலாலிமைந்தா! என்னும்

அஞ்சிறைய புட்கொடியே ஆடும்பாடும்
அணியரங்க மாடுதுமோ? தோழீ! என்னும்
என்சிரகின் கீழடங்காப் பெண்ணைப் பெற்றேன்
இருநிலத்துஓர்பழி படைத்தேன்ஏ! பாவமே

கல்லெடுத்துக் கல்மாரி காத்தாய்! என்றும்
காமருபூங்கச்சி யூரகத்தாய்! என்றும்
வில்லறுத்து மெல்லியல்தோள் தோய்ந்தாய்! என்றும்
வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தே! என்றும்
வல்லடர்த்து மல்லரை அன்று அட்டாய்! என்றும்
மாகீண்டதைத் தலத்து என்மைந்தா! என்றும்
சொல்லெடுத்துத் தன்கிளியைச் சொல்லே யென்று
துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே.

முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலைமூவா
மூவுலகும் கடந்து அப்பால் முதலாய்நின்ற
அளப்பரிய ஆரமுதை அரங்கம்மேய
அந்தணனை அந்தணர் தம்சிந்தை யானை
விளக்கொளியை மரகதத்தைத் திருத்தண்காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக்கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருக வென்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே.

கல்லுயர்ந்த நெடுமதில் சூழ்கச்சி மேய
களிறு! என்றும் கடல்கிடந்த கனியே! என்றும்
அல்லியம்பூமலர்ப் பொய்கைப் பழனவேலி
அணியழுந்தூர் நின்றுகந்த அம்மான்! என்றும்

சொல்லுயர்ந்த நெடுவீணை முலைமேல் தாங்கித்
தூமுறுவல்நகை இறையே தோன்றநக்கு
மெல்விரல்கள் சிவப்பெய்தத் தடவி ஆங்கே
மென்கிளிபோல் மிகமிழற்றும் என்பேதையே.

கன்றுமேய்ந்த இனிதுகந்த காளாய்! என்றும்
கடிபொழில் சூழ்கணபுரத்து என்கனியே! என்றும்
மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்தாய்! என்றும்
வடதிருவேங்கடம் மேயமைந்தா! என்றும்
வென்றசுரர் குலம்களைந்த வேந்தே! எனறும்
விரிபொழில் சூழ்திருநறையூர் நின்றாய்! என்றும்
துன்றுகுழல் கருநிறத்துஎன் துணையே! என்றும்
துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின் றாளே.

பொங்கார் மெல்லிளங் கொங்கைபொன் னேபூப்பப்
பொருகயல்கண் நீரரும்பப் போந்து நின்று
செங்கால மடப்புறவம் பெடைக்குப் பேசும்
சிறுகுரலுக்கு உடலுருகிச் சிந்தித்து ஆங்கே
தண்காலும் தண்குடந்தை நகரும்பாடித்
தண்கோவலூர் பாடியாடக் கேட்டு
நங்காய்! நங்குடிக்கு இதுவோ நன்மை? என்ன
நறையூரும் பாடுவாள் நவில்கின் றாளே.

கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயும்
கைத்தலமும் அடியிணையும் கமலவண்ணம்
பார்வண்ண மடமடங்கை பத்தர் பித்தர்
பனிமலர்மேற் பாவைக்குப் பாவம் செய்தேன்

ஏர்வண்ண வென்பேதை என்சொல் கேளாள்

எம்பெருமான் திருவரங்கம் எங்கே? என்னும்

நீர்வண்ணன் நீர்மலைக்கே போவே னென்னும்

இதுவன்றோ நிறையழிந்தார் நிற்கு மாறே!

முற்றாரவன முலையாள் பாவைமாயன்

மொய்யகலத் துள்ளிருப்பாள் அஃதும்கண்டு

அற்றாள் தன்நிறையழிந்தாள் ஆவிக்கின்றாள்

அணியரங்க மாடுதுமோ? தோழீ! என்னும்

பெற்றேன் வாய்ச்சொல் இறையும் பேசக்கேளாள்

பேர்பாடித் தண்குடந்தை நகரும்பாடி

பொற்றாமரைக் கயம்நீராடப் போனாள்

பொருவற்றாள் என்மகள் உம்பொன்னும் அஃதே.

தேராளும் வாளரக்கன் செல்வம் மாளத்

தென்னிலங்கை முன்மலங்கச் செந்தீயொல்கி

போராள னாயிரந்தோள் வாணன் மாளப்

பொருகடலை அரண்கடந்து புக்கு மிக்க

பாராளன் பாரிடந்து பாரையுண்டு

பாருமிழந்து பாரளந்து பாரையாண்ட

பேராளன் பேரோதும் பெண்ணை மண்மேல்

பெருந்தவத் தளென்றல்லால் பேசலாமே?

மைவண்ண நறுங்குஞ்சிக் குழல்பின் தாழ

மகரம்சேர் குழை இருபாடு இலங்கியாட

எய்வண்ண வெஞ்சிலையே துணையா இங்கே

இருவராய் வந்தார் என்முன்னே நின்றார்

கைவண்ணம் தாமைரை வாய்கமலம் போலும்
கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே
அவ்வண்ணத் தவர்நிலைமை கண்டும் தோழீ!
அவரைநாம் தேவரென்று அஞ்சினோமே.

நைவள மொன்றாராய நம்மை நோக்கா
நாணினார்போல் இறையே நயங்கள் பின்னும்
செய்வளவில் என்மனமும் கண்ணும்ஓடி
எம்பெருமான் திருவடிக் கீழணைய இப்பால்
கைவளையும் மேகலையும் காணேன் கண்டேன்
கனகமகரக் குழையிரண்டு நான்கு தோளும்
எவ்வளவுண்டு எம்பெருமான் கோயில்? என்றேற்கு
இதுவன்றோ எழிலாலி என்றார் தாமே.

உள்ளூரும் சிந்தைநோய் எனக்கே தந்துஎன்
ஒளிவளையும் மாநிறமும் கொண்டார் இங்கே
தெள்ளூரும் இளந்தெங்கின் தேறல்மாந்திச்
சேலுகளும் திருவரங்கம் நம்மூரென்ன
கள்ளூரும்பைந் துழாய்மாலை யானைக்
கனவிடத்தில் யான் காண்பன், கண்டபோது
புள்ளூரும்கள்வா! நீபோகே லென்பன்
என்றாலும்இது நமக்கோர் புலவி தானே

இருகையில் சங்கிவை நில்லாஎல்லே பாவம்!
இலங்கொலிநீர்ப்பெரும் பௌவம் மண்டியுண்ட
பெருவயிற்ற கருமுகிலே யொப்பர் வண்ணம்
பெருந்தவத்தர் அருந்தவத்து முனிவர்சூழ

ஒருகையில் சங்குஒருகை மற்றா ழியேந்தி
உலகுண்ட பெருவாயார் இங்கேவந்து என்
பொருகயற்கண் நீரரும்பப் புலவிதந்து
புனலரங்கம் ஊரென்று போயினாரே.

மின்னிலங்கு திருவுருவம் பெரிய தோளும்
கரிமுனிந் தகைத் தலமும் கண்ணும்வாயும்
தன்னலர்ந்த நறுந்துழாய் மலரின்கீழே
தாழ்ந்திலங்கு மகரம்சேர் குழையும் காட்டி
என்னலனும் என்னிறைவும் என்சிந்தையும்
என்வளையும் கொண்டு என்னையாளும் கொண்டு
பொன்னலர்ந்த நறுஞ்செருத்திப் பொழிலினூடே
புனலரங்கம் ஊரென்று போயினாரே.

தேமருவு பொழிலிடத்து மலர்ந்த போதைத்
தேனதை வாய்மடுத்து உன்பெடையும்நீயும்
பூமருவி இனிதமர்ந்து பொறியிலார்ந்த
அறுகால சிறுவண்டே! தொழுதேன் உன்னை
ஆமருவி நிறைமேய்ந்த அமரர்கோமான்
அணியழுந்தூர் நின்றானுக்கு இன்றே சென்று
நீமருவி யஞ்சாதே நின்று ஓர்மாது
நின்நயத்தாளென்று இறையே இயம்பிக் காணே.

செங்கால மடநாராய்! இன்றே சென்று
திருக்கண்ணபுரம் புரம்புக்கு என் செங்கண் மாலுக்கு
என்காதல் என் துணைவர்க்கு உரைத்தியாகில்
இதுவொப்ப எமக்கின்பமில்லை நாளும்

பைங்கான மீதெல்லாம் உனதேயாகப்
பழகமீன் கவர்ந்து உண்ணத் தருவன் தந்தால்
இங்கேவந்து இனிதிருந்து உன்பெடையும் நீயும்
இருநிலத்தில் இனி தின்பமெய்த லாமே.

தென்னிலங்கை யரண் சிதறி அவுணன் மாளச்
சென்று உலகம் மூன்றினையும் திரிந்தோர்தேரால்
மன்னிலங்கு பாரத்தை மாளவூர்ந்த
வரையுருவின் மாகளிற்றைத் தோழீ! என்தன்
பொன்னிலங்கு முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு
போகாமை வல்லேனாய்ப் புலவியெய்தி
என்னிலங்க மெல்லாம் வந்து இன்பமெய்த
எப்பொழுதும் நினைந்து உருகியிருப்பன் நானே.

அன்றாயர் குலமகளுக் கரையன் தன்னை
அலைகடலைக் கடைந் தடைந்த அம்மான் தன்னை
குன்றா தவலியரக்கர் கோனை மாளக்
கொடுஞ்சிலை வாய்ச்சரந்துரந்து குலங்களைந்து
வென்றானை குன்றெடுத்த தோளினானை
விரிதிரைநீர் விண்ணகரம் மருவிநாளும்
நின்றானை தண்குடந்தைக் கிடந்த மாலை
நெடியானை அடிநாயேன் நினைந்திட் டேனே.

மின்னுமாமழை தவழும் மேக வண்ணா!
விண்ணவர்தம் பெருமானே! அருளா யென்று
அன்னமாய் முனிவரோடு அமரரேத்த
அருமறையை வெளிப்படுத்த அம்மான் தன்னை

மன்னுமாமணி மாடமங்கை வேந்தன்

மானவேல் பரகாலன் கலியன்சொன்ன

பன்னியநூல் தமிழ்மாலை வல்லார் தொல்லைப்

பழவினையை முதலரிய வல்லார் தாமே.

---

## துணைநூற்பட்டியல்


**இலக்கிய நூல்கள்**

1) கந்தபுராணம் – சு. அ. இராமசாமிப் புலவர், (பதிப்பாசிரியர்) திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் திருநெல்வேலி – 6 செப்டம்பர் – 1966

2) கந்தபுராணம் – ஆரணிய காண்டம், உ.வே.சா. நூல் நிலைய வெளியீடு, சென்னை – 1959.

3) கம்பராமாயணம் – யுத்தகாண்டம், முதற்பகுதி, உ.வே. சா. நூல்நிலைய வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு – 1962.

4) கலித்தொகை – நச்சினார்க்கினியருரை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. 5ஆம்பதிப்பு மார்ச் – 1958.

5) குறுந்தொகை – தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர் – செப்டம்பர் – 1985.

6) திருக்குறள் – திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1981

7) திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம் – பெரிய வாச்சான் பிள்ளை

வியாக்யானம் ஸ்ரீ கிருஷ்ணசுவாமி ஐய்யங்கார் (பதிப்பாசிரியர்) புத்தூர் அக்ரஹாரம், திருச்சி – 1993.

8) நற்றிணை – திருநெல்வேலி சைவசித்தாந்த நூல்பதிப்புக் கழகம் – 1967.

9) நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் முதலாயிரம் – ஸ்ரீகிருஷ்ணசுவாமி ஐய்யங்கார், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி – 17. வெளியீடு – 1996.

10) பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கியருரையும்– தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சை, மே, 1986.

11) பரிபாடல் மூலமும் உரையும்– உ.வே.சா. நூல்நிலையம் சென்னை – 41. ஐந்தாம் பதிப்பு – 1980

12) புறநானூறு – திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூல்பதிப்புக் கழகம், சென்னை – 1.

13. ஸ்ரீமத்பாகவதம்– ஸ்ரீவேணுகோலாச்சாரியார் (மொழிபெயர்ப்பாசிரியர்) இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை, பதிப்பு – 1966.

**இலக்கண நூல்கள்**

1) தொல்காப்பியம்( பொருள்)– திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை – 1.

2) நம்பியகப்பொருள்– தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், டி.டி.கே. சாலை, சென்னை–18.

தத்துவநூல்கள்

1) ஆசாரியஹிருதயம்– அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, முதற்பதிப்பு – 1965

2) ஸ்ரீவசனபூஷணம்– பிள்ளை லோகாச்சாரியார், க.நாராயணசாமி, நாயுடு (பதிப்பாசிரியர்) தமிழாக்கம் (பு.ரா.புருஷோத்தம நாயுடு) 1950

**ஆய்வு நூல்கள்**

1) அறிவுடை நம்பி ம.சா. திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கை, கருமணிப்பதிப்பகம், ஜெய்ஹிந்துபுரம், மதுரை, ஏப்ரல் – 1986.

2) குலசேகரன். ச வைணவத்தில் ஆழ்வார்கள் காலநிலை, திருமகள் வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, செப்டம்பர் – 1988.

3) கோபாலன். ப. பரஞ்சோதி திருவிளையாடற் புராணம் இலக்கிய மதிப்பீடு. லட்சுமி பதிப்பகம், கோவை, முதற்பதிப்பு – 1983.

4) சண்முகம்பிள்ளை. மு சிற்றிலக்கிய வகைகள், மணிவாசகர் நூல்நிலையம், பாரிமுனை, சென்னை – 1. முதற்பதிப்பு – 1982.

5) சரளாராஜகோபாலன் – சங்க இலக்கியம், ஒளிபதிப்பகம், சென்னை – 18. முதற்பதிப்பு – 1988.

6) சுப்புரெட்டியார். ந.– அகத்திணைக் கொள்கைகள், பாரிநிலையம், சென்னை – 1. முதற்பதிப்பு – 1981.

7) சுப்ரமண்யன் ச.வே.– இலக்கணத்தொகை யாப்புப்பட்டியல், தமிழ்ப்பதிப்பகம், கஸ்தூரிபாய் நகர், சென்னை, பிப்ரவரி – 1978.

8) சுப்ரமண்யன் ச.வே.– தமிழிலக்கியவகையும், வடிவமும் தமிழ்ப்பதிப்பகம், பெருங்குடி, சென்னை – 6. முதற்பதிப்பு – 1984.

9) செயராமன். ந.வி.– பாட்டியலும், இலக்கிய வகையும், கதிரவன் அச்சகம், இந்திரா நகர்.

10) நாராயணன். க.– சித்தர் தத்துவம், மாரி பதிப்பகம், கொங்கு பாளையம், புதுவை – 8, இரண்டாம் பதிப்பு – 1990.

11) நாராயணவேலுப்பிள்ளை.எம். பிரபந்தக் காட்சிகள், கவிதா பப்ளிகேஷன், மேட்டுப்பாளையம், சென்னை – 33. முதற்பதிப்பு, டிசம்பர் – 1982

12) விமலானந்தம். மது. ச.– தமிழிலக்கியவரலாற்றுக்களஞ்சியம் ஐந்திணைப் பதிப்பகம், திருவல்லிக் கேணி, முதற்பதிப்பு, டிசம்பர் – 1987.

13) வேலுப்பிள்ளை. ஆ– தமிழிலக்கியத்தில் காலமும் கருத்தும், பாரி புத்தகப் பண்ணை, டி.பி கோவில் தெரு, சென்னை – 5. மூன்றாம்பதிப்பு – 1985.

**சுவடி**

சிவபுராணம்– உமையம்மையார் ஊடலும் கூடலும், ஏட்டுச்சுவடி, பிரெஞ்சிந்தியக் கலைக்கழகம், புதுவை.



# எமது வெளியீடுகள்



**கவிதைகள்**

மனச்சுவடுகள் - கவிஞர் மரு.பரமகுரு

உதய நகரிலிருந்து - கவிஞர் இரா. மீனாட்சி

சீதாயணம் - கவிஞர் சேதுபதி

மகாகவி பாரதியார் கவிதைகளில் புதுச்சேரி - தொகுப்புநூல்

**ஆய்வு நூல்கள்**

மானுடம் பேணிய தமிழ் - முனைவர் ஆ. ஜோசப் சகாயராஜ்

தமிழ் இலக்கண உணர்வுகள் - பேரா. ஆ. சிவலிங்கனார்

திருநாவுக்கரசர் தேவாரத்தில் சிவமூர்த்தங்கள்

- தமிழாகரர் முனைவர் பா. சுந்தர்

**வரலாற்று ஆய்வு நூல்கள்**

பறம்புமலை திருக்கொடுங்குன்ற வரலாறு - மரு. பரமகுரு

அருவியூர் நகரத்தார் அறப்பணிகளும் வரலாறும்

- புலவர் சீ. இலட்சுமணன்

பைந்தமிழ்க்காவலர் பழ. முத்தப்பனார் - கிருங்கை சேதுபதி

**சிறுகதை**

பாரிவேட்டை - சேதுபதி


## *தமிலன் பதிப்பகம்*

12, 7ஆவது குறுக்குத் தெரு



பாரதிநகர்

*புதுச்சேரி - 605 008*






"திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் என்ற இந்நூல் பேராசிரியை திருமதி அகிலா அவர்களின் அருமையான படைப்பு. மிகவும் கடினமான அகத்துறையில் உள்ள நூல்களை எல்லாம் அலசி, ஆராய்ந்து, ஒப்புநோக்கி படைத்துள்ள இந்நூல் ஆசிரியை அவர்களின் ஆழ்ந்த அறிவு, கடின உழைப்பு, ஆராய்ச்சித் திறன், ஆகியவற்றிற்கு நன்கு சான்று பகருகின்றது. ஆழ்வார்கள் பிரபந்தங்களில் குறிப்பாக, திருநெடுந்தாண்டகத்தில் அகப்பொருள் பற்றி விரிவாக ஆய்வு செய்யும் சிறந்த நூலும், முதல் நூலும் இதுவே ஆகும். இந்நூலை எடுத்துப் படிக்க ஆரம்பித்தவுடன் முழுமையாகப் படித்து நோக்கும்படியான நடையில் எழுதப்பட்டுள்ளது குறிப்பிட வேண்டியதாகும். இவ்வாறு சிறந்த நூலைப் படைத்த பேராசிரியை திருமதி அகிலாவிற்கு தமிழ்கூறும் நல்லுலகமும், குறிப்பாக வைணவ உலகமும் மிகவும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளன."

- முனைவர் அ.வே. அரங்காச்சாரியார்


கபிலன் பதிப்பகம்
12, 7ஆவது குறுக்குத் தெரு
பாரதிநகர்
புதுச்சேரி - 605 008.
e-mail: kapilanpub@yahoo.co.in